AMB-M.Ad/July



# அம்புலிமாமா

## ஆகஸ்ட் 1997



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

அம்மா
எல் ஐ சினா என்ன ?

பாதுகாப்பான,வசதியான
கம்பனினு அர்த்தம் குட்டியே!



எல் ஐ சி என்ருல் லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா. இது குழந்தைகளின் எதிர்காலத்திற்கென பல புதுமையான திட்டங்களை வைத்துள்ளது. ஜீவன் சுகன்யா, ஜீவன் கிஷோர், ஜீவன் பால்யா மற்றும் சில்ரன்ஸ் மணிபேக் பாலிசிபற்றி உங்கள் பெற்றோரிடம் கேளுங்கள்.

எல். ஐ. சி. உங்களை பேணுகிறது, எப்போதும்.



**லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

*காப்பீடு செய்யுங்கள், பாதுகாப்பு பெறுங்கள்.*

## உங்கள் பிரதிகளுக்கு முன் பதிவு செய்யுங்கள்!

# மங்கை நவம்பர் '97



## தீபாவளி மலர்

கலை, இலக்கியம், ஆன்மீகம்... இவற்றின் கருத்துக் கருவூலமாக... படித்துப் பாதுகாக்கும் பைந்தமிழ் கதம்பமாக... **மங்கை தீபாவளி மலர் '97** மலர்கிறது.

**இத்துடன் இலவச இணைப்பாக சிவ - சக்தி - விஷ்ணு திருத்தலங்கள் பற்றிய சிறப்புக் கட்டுரைகளுடனும், உங்கள் பூஜையறையை பரவசப்படுத்தும் முழுப்பக்க வண்ணப் படங்களுடனும் 'மங்கை ஆலயமலர்'!**

விமலா ரமணி எழுதும் **'தியாக தீபம்'** - குறுநாவல் கௌசல்யா ரங்கநாதன் எழுதும் **'தமயந்தி'** - நெடுங்கதை.

சாரதா விஸ்வநாதன், ரமணி, லட்சுமி ராஜரத்னம், சாந்தி ராமமூர்த்தி, சுவாதி அமர்நாத், அருள்ஞானி கல்பாக்கம் அடிகளார், 'வைத்திய கலாநிதி' நந்தி, கீதா தெய்வ சிகாமணி, செம்பூரான், மைதிலி சேஷாத்ரி ஆகியோரின் சிறப்புக் கட்டுரைகள். பிரபல எழுத்தாளர்களின் சிறப்புச் சிறுகதைகள் மற்றும் 1997 தீபாவளி முதல் - 1998 தீபாவளி வரை, 12 ராசிகளுக்கான விரிவான பலன்கள்.

*சென்ற ஆண்டின் தீபாவளி மலர் கடைகளில் விரைவிலேயே தீர்ந்து விட்டதால் ஏமாற்றமடைந்தோம் என்று பல வாசகர்கள் நமக்கு எழுதி இருந்தார்கள். இந்த ஆண்டு முன் கூட்டியே கடைகளில் பிரதிகளுக்கு சொல்லி வைத்து உங்களுக்குரிய பிரதிகளை நிச்சயமாகப் பெறுவீர்கள் என நம்புகிறோம்.*

**விலை ரூ. 25/-**




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## பொன்னான சுதந்திரம்

நம் நாடு சுதந்திரம் பெற்று ஐம்பது ஆண்டுகளாயின. பொன்விழாக் கொண்டாடும் இந்த ஆண்டில் வருடக் கணக்காகப் போராடி, தியாகங்கள் புரிந்த பலரையும் நினைவு கூர்ந்து தலை வணங்குவோம்.

அன்னியரின் பிடியிலிருந்து விடுதலை பெற நம் நாட்டில் முதல் முழக்கம் செய்தது யார்? ஆம். 1857ல் கட்டுப்பாடான முறையில் அன்னியர் ஆட்சியை எதிர்த்துப் புரட்சி ஆரம்பமாகியது. அதைத் தொடர்ந்து பல கலகங்களும் இயக்கங்களும் தோன்றி சுதந்திர போர் மும்முரமாயிற்று. நம் நாட்டில் சிற்றரசர்களின் அனுமதிகள் பெற்று வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்தியக் கம்பெனி மெதுவாக நம் நாட்டை ஆள ஆரம்பித்து விட்டது. இதனை எதிர்த்துத்தான் பல போராட்டங்கள் நடந்தன. முடிவில் 1947ல் ஆனந்த சுதந்திரத்தை அடைந்து ஐம்பதாவது ஆண்டைப் பொன்விழா ஆண்டாக மகிழ்ச்சியுடன் நாம் அனைவரும் சேர்ந்து கொண்டாடுகிறோம்.

**மதிமுகம்: 101** **ஆகஸ்டு 1997** **புன்னகை: 2**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

# பிரான்ஸில் புதிய அரசாங்கம்

அண்மையில் இங்கிலாந்தில் பொதுத் தேர்தலில் கன்ஸெர்வடிவ் கட்சி தோற்று லேபர் கட்சி ஆட்சியைக் கைப்பற்றியது போல பிரான்ஸிலும் ஜூன் 1ந் தேதி நடந்த பொதுத் தேர்தலில் கன்ஸர்வெடிவ் கட்சி படுதோல்வி யுறவே இடதுசாரி கூட்டணி ஆட்சியைக் கைப்பற்றியது. 13 ஆண்டுகளுக்குப் பின் இடது சாரிக் கூட்டணி இப்போது ஆட்சிக்கு வந்துள்ளது. சோஷலிஸ்ட் குழுத் தலைவர் லயோனல் ஜாஸ்பின் புதிய பிரதமராக ஆனார். இந்தத் தேர்தல் ஒரு ஆண்டுக்கு முன் நடந்து விட்டது. இதற்கு முன் ஆண்ட கன்ஸர்வடிகள் இம் முறையிலும் வெற்றி தமக்கே கிடைக்கும் என்ற ஆணவத்தில் தேர்தலை நடத்த வேண்டிய தேதிக்கு ஓராண்டு முன்னரே நடத்தினார்கள். தற்போதும் கன்ஸெர்வடிவ் கட்சியைச் சேர்ந்த ஜாக்விஸ் சிராக் தான் நாட்டின் அதிபராக இருக்கிறார். ஆனால் கன்ஸர்வடிவ் பிரதமர் ஆலென் ஜுப்பிற்கு பதிலாக பிரதமராக லயோனல் ஜுஸ்பின் ஆனார்.

பிரான்ஸின் நாடாளுமன்ற உறுப்பினர் தொகை 577. இத் தேர்தலில் கன்ஸெர்வடிவ்களுக்குக் கிடைத்ததோ 253 இடங்கள்தான். இடதுசாரிக் கூட்டணிக்கு 274 இடங்கள் கிடைத்தன. கம்யூனிஸ் கட்சி 38 இடங்களைக் கைப்பற்றி இருந்தது. அரசாங்கத்தை அமைக்கப் பெரும்பான்மை இல்லாததால் சோஷலிஸ்ட்கள் கம்யூனிஸ்ட்களின் உதவியை நாடினார்கள். அரசாங்கம் அமைக்க ஜுஸ்பின் அழைக்கப்பட்டதை கம்யூனிஸ்ட் கட்சி அங்கீகரித்தது. 14 பேர்கள் கொண்ட அமைச்சரவையில் கம்யூனிஸ்ட்கள் இரு இடங்களைப் பெற்றனர்.

பிரான்ஸின் அரசியல் நிர்ணயச் சட்டப்படி நாட்டின் நிர்வாகப் பொறுப்பு முழுவதும் அந்நாட்டு அதிபரின் கையில்தான் உள்ளது. தற்போது பிரான்ஸின் அதிபர் கன்ஸர்வடிவ் கட்சியைச் சார்ந்தவர். இடதுசாரிக் கூட்டணியைச் சேர்ந்தவர் நாட்டின் பிரதமர். பிரதமரான ஜாஸ்பீன் "நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டு அதிபர் சிராக்குடன் பரஸ்பர கண்ணியத்துடன் செயல் புரிவேன்" என்று கூறியுள்ளார்.

இதுவரை பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக இருந்த ஜுஸ்பின் சிறிது காலத்திற்குப் பிரான்ஸின் கல்வி மந்திரியாகக் கூட இருந்தவர். கன்சர்வடிவ் கட்சியின் தேர்தல் வாக்குறுதிகளை வெறும் ஏட்டளவில் உள்ளவை என அவர் வர்ணித்தார். "பிரஞ்சு மக்களுக்கு மூட்டை மூட்டையான பொய்கள் தேவை இல்லை. அவர்களுக்கு உண்மைகளைத்தான் தெரிவிக்க வேண்டும்" என அவர் கூறினார்.

பிரான்ஸில் தற்போது வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்துத் தாண்டவமாடுகிறது என அவர் எண்ணுகிறார். எனவே வேலை வாய்ப்புகளை அதிகரிப்பதே தனது வேலை என்று அவர் கருதுகிறார். "மக்கள் என்னிடமிருந்து நிறைய எதிர்பார்க்கிறார்கள். ஆனால் எல்லாம் ஒரே சமயத்தில் வேண்டுமெனக் கோரவில்லை. வரும் நாட்களில் அவர்கள் தம் கோரிக்கைகளை நாட்டின் உண்மையான முன்னேற்றத்திற்காகத்தான் கோருகிறார்கள்" என்று அவர் தம் கருத்தைத் தெரிவித்துள்ளார்.





# புரிய வைத்தார்!

வித்தியாபுரத்தில் வைத்தியலிங்கம் என்ற தலை சிறந்த வைத்தியர் இருந்தார். அந்த நாட்டிலேயே அவருக்கு இணையான வைத்தியர் யாருமே இல்லை. அவர் எப்படிப் பட்ட நோயையும் மிக விரைவில் போக்கி விடுவார். அவரது ஒரே மகன் நாகலிங்கம். சிறுவயதில் மிகவும் பிடிவாதக்காரனாக இருந்தான். அவனது பெற்றோர், பெரியவனானால் திருந்தி விடுவானென எண்ணி செல்லம் கொடுத்து வளர்த்து விட்டார்கள்.

நாகலிங்கம் நல்ல அறிவாளியே. காவியங்கள், புராணங்கள், கவிதைகள் என எல்லாவற்றையும் படித்தவன். ஆனால் பிடிவாதக்காரன். மற்றவர்களை மட்டம் தட்டுபவன். பெரியவர்களுக்கு உரிய மரியாதையைக் கொடுக்க மறுப்பவன். அவனது தந்தை அவனிடம் அவன் போக்கை மாற்றிக் கொண்டு எல்லோரிடமும் மரியாதையாக நடக்க வேண்டுமென்றும், அவன் வைத்திய சாஸ்திரத்தையும் கற்க வேண்டுமென்றும் அடிக்கடி அறிவுரை கூறி வந்தார், ஆனால் நாகலிங்கம் பிடிவாதமாகத் தன் போக்கிலேயே இருந்து வந்தான். தன் தந்தை சொன்னதைக் கேட்கவில்லை.

ஒரு நாள் வைத்தியலிங்கம் தன் மகனிடம் ''நீ யாரையும் மதியாமல் பெரியவர்களுக்கு மரியாதை செலுத்தாமல் இருந்தால் உனக்கு கடும் நோய் பிடித்து விடும். அந்த நோயால் நீ மிகவும் கஷ்டப்பட வேண்டி இருக்கும். அதனால் எச்சரிக்கையாக இரு'' என்று கூறினார். அதையும் நாகலிங்கம் லட்சியம் செய்யவில்லை.

இதற்கு ஒரு மாதத்திற்குப் பிறகு ஒரு நாள் காலையில் நாகலிங்கம் எழுந்த போது தன் உடலெங்கும் சிவப்பும் வெள்ளையுமான புள்ளிகள் பரவி இருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். தன் மகன் பார்ப்பதற்கு விகாரமாக இருப்பது கண்டு வைத்திய

—சிவனார் செல்வன்—

லிங்கம் அவனுக்கு மருந்து கொடுத்து உட்கொள்ளச் சொன்னார்.

அந்த மருந்தால் நாகலிங்கத்தின் கைகளிலும் கால்களிலும் இருந்த புள்ளிகளெல்லாம் இரண்டே நாட்களில் மறைந்து போயின. ஆனால் முதுகின் மீதும் வயிற்றின் மீதும் இருந்த புள்ளிகள் மறையவில்லை. அவற்றை மறைத்துக் கொள்ள அவன் எப்போதும் சட்டை அணிந்து கொண்டே இருக்க வேண்டியதாயிற்று.

வைத்தியலிங்கமும் ''மகனே! இனியாவது பிறரை மதித்து மரியாதை கொடு. அப்போது தான் இந்த நோய் போகும்'' என்றார். நாகலிங்கம் அதை நம்பவில்லை. தன் தந்தை வேண்டுமென்றே தக்க மருந்து கொடுக்காமல் தன் நோயை குணப்படுத்தாமல் இருப்பதாக எண்ணினான். அவன் தன் சந்தேகத்தைத் தன் தாயாரிடம் கூற, அவளும் அதைத் தன் கணவனிடம் சொன்னாள். வைத்தியலிங்கமும் ''நான் என் பகைவனுக்கு கூட நோயை குணமாக்கும் மருந்தைத் தான் கொடுப்பேனே யொழிய வேறு மருந்து கொடுத்து அவனது நோயை குணப்படுத்தாமல் இருக்க மாட்டேன். இவனது நோய் மறைய வேண்டுமானால் இவன் பிறரை மதிக்க வேண்டும். பெரியவர்களுக்கு மரியாதை கொடுக்க வேண்டும்'' என்று வேதனைப்பட்டவாறே கூறினார்.

இச்சமயத்தில் வைத்தியலிங்கத்திடம் ஒரு நோயாளி வந்தான். அவனுக்கும் நாகலிங்கத்தைப் பற்றிய நோயே இருந்தது. வைத்தியலிங்கம்



அவனுக்கும் மருந்தைக் கொடுத்து ''நீ பிறர் மீது கோபப்படாதே. ஆத்திரம் கொள்ளாதே. எல்லோரையும் மதித்து நட. பெரியவர்களிடம் மரியாதையாக நடந்து கொள். இந்த மருந்தையும் உட்கொள். ஐந்து நாட்களில் உன் நோய் முழுவதுமாகப் போய் நீ குணமடைந்து விடுவாய்'' என்று கூறி அனுப்பினார். அந்த நோயாளியும் ஐந்தே நாட்களில் பூரண குணமடைந்து விட்டான்.

இதைக் கண்ட நாகலிங்கம் ''என் நோயை ஏன் நீங்கள் இப்படி குணப்படுத்தவில்லை? எனக்கும் அவனுக்குக் கொடுத்த மருந்தையே கொடுங்கள். நீங்கள் வேண்டுமென்றே நல்ல மருந்தாகக் கொடுக்காமலும் என் நோயைக் குணப்படுத்தாமலும் இருக்கிறீர்கள்'' என்று ஆத்திரப்பட்டவாறே

TA-F-2



கேட்டான். வைத்தியலிங்கம் சிரித்த வாறே ''உனக்கும் நான் அவனுக்குக் கொடுத்த மருந்தையே கொடுத்தேன். அவன் நான் சொன்ன அறிவுரைகளை ஏற்று நடந்தான். அதனால் பூரண குணம் அடைந்தான். நீ அவ்வாறு செய்யாததால் மருந்தால் பூரண குணம் அடையவில்லை. இதெல்லாம் வைத்திய சாஸ்திரத்தை நீ நன்கு படித்தால் தான் உனக்குப் புரியும்'' என்றார்.

நாகலிங்கமோ ''எனக்கு வைத்திய சாஸ்திரம் வேண்டாம். என் நோயைத் தீர்க்கும் மருந்தைக் கூறும் புத்தகம் எது என்று சொல்லுங்கள். அதை நான் படித்து அந்த மருந்தைத் தயாரித்து உட்கொண்டு என் நோயை குணப்படுத்திக் கொள்கிறேன்'' என்றான். வைத்தியலிங்கமோ சிரித்துக் கொண்டே ''நோயை குணப்படுத்த மருந்தை மட்டும் தெரிந்து வைத்துக் கொண்டால் போதாது. மனித உடலமைப்பு, அதன் உறுப்புகள், அவற்றின் அசைவுகள் பற்றியெல்லாம் தெரிந்து அதற்கேற்ப நோய்க்கு மருந்து கொடுக்க வேண்டும். இதற்கு வைத்திய சாஸ்திரத்தை நன்கு கற்றாலே புரியும்'' என்றார்.

அதைக் கேட்ட நாகலிங்கம் ''அப்படியா? நான் வைத்திய சாஸ்திரத்தைக் கற்று நீங்கள் சொல்வது தவறு என்று நிரூபிக்கிறேன்'' என்று சவால் விட்டான். வைத்தியலிங்கமும் ''ஆகா. தாராளமாகச் செய். ஆனால் முதலில் வைத்திய சாஸ்திரத்தை நன்கு கற்றுக் கொள். எதையும் ஒரு ஆசிரியர் வாயிலாகக் கற்கவேண்டும். எனவே நானே உன் ஆசிரியராக இருந்து கற்பிக்கிறேன்'' என்றார். நாகலிங்கமும் தன் தந்தையிடமிருந்து வைத்திய சாஸ்திரத்தைக் கற்கலானான்.

வைத்திய சாஸ்திரத்தை விரைவில் கற்க வேண்டுமென்று பிடிவாதமாக இருந்ததால் அறிவாளியான நாகலிங்கம் வைத்திய சாஸ்திரத்தின் முக்கிய அம்சங்களைத் தெரிந்து கொண்டு விட்டான். அப்போது அவனுக்குத் தன் தந்தை கூறியதில் ஓரளவு உண்மை இருப்பதாகத் தெரிந்தது. மகிழ்ச்சியும் திருப்தியும் மனிதனின் உடல் நிலையை நன்கு வைப்பவை எனவும், வெறுப்பும் பொறாமையும் உடல் நலத்தை கெடுக்கின்றன என்பதையும் அவன் தெரிந்து கொண்டான். ஆனாலும் தன் தந்தை தன் விஷயத்தில் சரியான மருந்தைத் தனக்குக் கொடுக்கவில்லை என்றே அவன் இன்னமும்

சந்தேகப்பட்டான்.

நாகலிங்கத்திற்குத் தன் நோயைக் குணப்படுத்தும் மருந்து எது என்று தெரிந்து விட்டது. அதைத் தயாரிக்கக் காட்டிலுள்ள இரு மூலிகைகளைத் தேடிக் கண்டுபிடித்து எடுத்து வர வேண்டும். ஏனெனில் வைத்தியலிங்கத்திடம் இருந்த அவை தீர்ந்து விட்டன. தன் நோயைத் தானே குணப்படுத்திக் கொண்டு விட வேண்டுமென்ற பிடிவாதத்தோடு நாகலிங்கம் அருகிலிருந்த ஒரு காட்டிற்குள் சென்றான். அங்கு ஓரிடத்தில் தனக்குத் தேவைப்பட்ட மூலிகைகள் இருப்பதை அவன் கண்டான். அவன் அவற்றைத் தோண்டி எடுக்கப் போகையில் ஒரு அம்பு அவனது புஜத்தில் உராய்ந்தவாறே சற்று தூரத்தில் போய் விழுந்தது. அப்படி உராய்ந்ததில் அவனுக்கு லேசாக காயமும் ஏற்பட்டது. அவன் கோபத்தோடு ''யாரடா அவன் குருட்டுப் பயல்? கண்மூடித்தனமாக எந்த மடையனடா என் மீது அம்பு எய்தவன்?'' என்று கத்தினான்.

அப்போது அவன் முன் அந்த நாட்டு மன்னன் வந்து நின்றான். அவன் வேட்டையாட வந்து ஏதோ ஒரு மிருகத்தின் மீது அம்பு எய்யவே அந்த அம்புதான் நாகலிங்கத்தின் புஜத்தின்மீது உராய்ந்து காயப்படுத்தியது. மன்னன் நாகலிங்கத்தைப் பார்த்துப் புன்னகை புரிந்தவாறே ''நான் வேண்டுமென்றே உன் மீது அம்பை எய்யவில்லை. நீயும் என்னை வேண்டுமென்றே வையவில்லை. அம்பு உன்னை காயப்படுத்தியது என் தவறுதலால்தான் என ஒப்புக் கொள்கிறேன். அறியாமல் இந் நாட்டு மன்னனை நீ திட்டியது தவறு என்று ஒப்புக் கொள்'' என்றான்.

நாகலிங்கமோ ''அம்பு எய்தது தவறு என ஒப்புக் கொண்டாய். அம்பு என் மீது பட்டதால்தான் திட்டினேன். அது தவறே அல்ல'' என்று துடுக்காகக்



கூறினான். அப்போது மன்னன் ''அடே! நான் இந் நாட்டு மன்னன். மன்னனிடம் மரியாதையாகப் பேசு'' என்று சற்றுக் கடுமையாகக் கூறினான். நாகலிங்கமும் ''ஒரு சாதரணக் குடி மகன் செய்யும் தவறை விட ஒரு நாட்டின் மன்னன் தவறு செய்வது பெரும் குற்றம். இப்படிப்பட்டவன் மன்னனாக இருக்கத் தகுந்தவன் அல்ல'' என்று வார்த்தைகளைக் கொட்டினான்.

மன்னனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் தன் வீரர்களை அழைத்து ''மன்னனை அவமதித்த இவனை மரத்தில் கட்டி சவுக்கால் அடியுங்கள்'' என்று கட்டளை இட்டான். நிலைமை இப்படி விபரீதமாகி விட்டதைக் கண்ட நாகலிங்கம் பயந்து நடுங்கி ''அரசே! நான் புகழ் பெற்ற வைத்தியர் வைத்தியலிங்கத்தின் மகன். என்னைப் பிடித்த நோயைத் தீர்க்க மூலிகை எடுக்கும் போது தங்கள் அம்பு என் மீது பட்டு காயப்படுத்தியது. நோயின் வலியும் அம்பால் ஏற்பட்ட காயத்தின் வலியும் தாங்க முடியாமல் ஆத்திரப்பட்டுத் தங்களைத் திட்டி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்று கூறி தன் சட்டையைக் கழற்றி முதுகையும், வயிற்றையும் அவனுக்குக் காட்டினான்.

நாகலிங்கத்தின் முதுகிலும் வயிற்றிலும் வெள்ளைப் புள்ளிகளும் சிவப்புப் புள்ளிகளும் இருப்பதைக் கண்டு மன்னன் மனம் இளகி விட்டது. மன்னன் ''அடடா! நீ இப்படிப்பட்ட நோயாளியா? வலிதாங்காமலா திட்டினாய்?'' என்று கூறிஅவனைக் தண்டிக்காமல் மன்னித்து விட்டு விட்டான். நாகலிங்கமும் சட்டையை மாட்டிக் கொண்டு மூலிகைகளை எடுத்துக் கொண்டு தப்பினேன், பிழைத்தேனென எண்ணியவாறே தன் வீட்டிற்கு ஓடினான்.

அவன் தன் தந்தையிடம் காட்டில் நடந்ததைக் கூறி ''நீங்கள் சொன்னது சரியே. வாய்த்துடுக்காய் பேசினேன். ஆனால் இந்த நோய் இருந்ததால் மன்னனிடமிருந்து தப்பினேன்'' என்றான். வைத்தியலிங்கமும் ''உன் இந்த வியாதி உன்னை வைத்திய சாஸ்திரம் கற்கவும் உதவியது. இனியாவது எல்லோரையும் மதித்து மரியாதை செய்'' என்றார். நாகலிங்கமும் சரியெனத் தலையை ஆட்டினான்.





# நான் சொன்னபடிதான்!

பார்வதிக்கும் பரமனுக்கும் பிறந்த ஒரே மகள் மல்லிகா. பெற்றோர் அவளை அருமை பெருமையாய் வளர்த்துப் பெரியவளாக்கி விட்டார்கள். அவளுக்குத் திருமண வயதும் வந்து விட்டது. அப்போது பார்வதி தன் கணவனிடம் ''நம் மகளுக்கு நல்ல பையனாகப் பார்த்து மணமுடித்து அந்த மாப்பிள்ளையை நம் வீட்டோடு வைத்துக் கொள்ள வேண்டும்'' என்றாள். பரமனும் ''நானும் இதைத்தான் நினைத்தேன். அப்படி ஒருவனைத் தேடிப் பிடிக்கிறேன்'' என்றான்.

ஆனால் பரமன் விரும்பியபடி வீட்டோடு மாப்பிள்ளையாக இருக்க எந்த வாலிபனும் இசையவில்லை. நாட்கள் ஓடிக்கொண்டே இருந்ததால் பரமனும் பார்வதியும் கவலைப்பட்டு முடிவில் தம் எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. முடிவில் அடுத்த ஊர் அரங்கநாதனுக்கு அவர்கள் மல்லிகாவை விவாகம் செய்து வைத்தார்கள்.

அரங்கநாதன் மல்லிகாவை அழைத்துக்கொண்டு ஊருக்குக் கிளம்பினான். அது வரை தம் மகளை விட்டுப் பிரியாதிருந்த பார்வதியும் பரமனும் கண்ணீர் ததும்பத் தம் மகளை மாப்பிள்ளையுடன் அனுப்பி வைத்தனர். மல்லிகாவும் ஒருவாறு தன் மனதைத் தேற்றிக் கொண்டு தன் கணவனுடன் கிளம்பினாள்.

அவள் ஒரு மாத காலம் தன் மாமியார் வீட்டில் இருந்தாள். அவளுக்கு அரங்கநாதனைப் பிடித்திருந்தாலும், அதுவரை வீட்டு வேலைகள் செய்து பழக்கப்பட்டிராத அவளுக்கு அங்கு சில வேலைகளைச் செய்வது கூடச் சிரமமாக இருந்தது. அதனால்தான் பிறந்த வீட்டிற்குப் போகப் போவதாகக் கூறி அவள் அரங்கநாதனையும் தன் வீட்டிற்கே வந்து விடுமாறு அழைத்தாள். அவனோ முடியாது

—எஸ். சோபினி—

எனக் கூறி அவள் வேண்டுமானால் தாராளமாகப் போகலாம் என்றான். அவளும் தன் கணவன் தன்னுடன் வரவில்லையே என்று கொஞ்சம் கூடக் கவலைப்படாமல் தன் பிறந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள்.

ஆனால் மூன்று நாட்கள் கூடக் கழியவில்லை. அவளுக்கு அரங்கநாதனின் நினைவே வந்தது. அதனால் அவள் தன் தாயாரிடம் ''அம்மா நான் என் புகுந்த வீட்டிற்குப்போய் என் கணவரோடு வாழ்கிறேன். இங்கே இருக்கப் பிடிக்கவில்லை.'' என்று சொல்லி விட்டுக் கிளம்பி விட்டாள். பார்வதியும் பரமனும் இவ்வளவு வருடங்களாகத் தம்மோடு ஒட்டி இருந்த மகளா இப்படி பேசுகிறாள் என்று திகைத்தனர்.

இதுபோல் அரங்கநாதன் தன் பெற்றோரிடம் ''நான் என் மனைவியைப் பர்க்கப் போகிறேன்'' எனக் கூறி விட்டுக் கிளம்பினாள் அவனது பெற்றோர் ''நீ இவ்வாறு செய்வது தம் குடும்ப கௌரவத்திற்குக் குறைவாகும். உன் மனைவிதானே இங்கிருந்து போனாள். அதனால் அவளே திரும்பி வரட்டும். நீ போகாதே'' என்று கூறியும் அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் சென்றான்.

நடு வழியில் மல்லிகாவும் அரங்கநாதனும் சந்தித்து, இருவரும் ஒரு மரத்தடியே உட்கார்ந்து பேசினார்கள். மல்லிகா கணவனிடம் ''என்னால் உங்கள் வீட்டிலிருந்து வீட்டு வேலைகளைச் செய்ய முடியாது. நீங்களும் என்னோடு என் வீட்டிற்கு வந்து இருக்க விரும்பவில்லை. அதனால் நாம் அந்த இரு வீடுகளுக்கும் போகாமல் ஒரு தனி வீட்டில் இருந்து நாமே தனியாகக் குடித்தனம் நடத்துவோம்'' என்றான்.

அரங்கநாதனும் உடனேயே ஒரு வீட்டைப் பார்த்து அதில் தன் மனைவியுடன் தனிக் குடித்தனம் நடத்தி வரலானான். அவர்களிருவரும் தம் பெற்றோர்களை மாதத்திற்கு ஒருமுறை போய்ப் பார்த்து வரலானார்கள்.

அரங்கநாதனின் தகப்பனார் தன் மனைவியிடம் ''பார்த்தாயா! என் மகன் நான் சொன்னபடித்தான் நடந்திருக்கிறான் அவன் ஒன்றும் தம் மாமனார் வீட்டில் போய் இருக்கவில்லை. இருக்கவும் மாட்டான். ஏனென்றால் அவன் என் மகன்'' என்று பெருமை பேசினார்.





# மாமன்னர் அசோகர்

## 7

(தட்சசீலத்தில் மூண்ட கலகங்களை அடக்கி விட்டு வந்த அசோகனைக் கொல்ல சுசிம்மன் தீட்டிய சதி வெற்றி பெறவில்லை. தனது மூத்த மகனின் செயல் கண்டு பிந்து சாரன் திகைத்துப் போனான். இரு அரசகுமாரர்களில் ஒருவனை உஜ்ஜயனிக்கு அனுப்புவது என்று அவன் தீர்மானித்தான். சுசிம்மனிடம் அவன் உஜ்ஜயினிக்குப் போகத் தயாரா என்று கேட்டபோது அவன்தான் பாடலிபுத்திரத்தை விட்டு அங்கு போக விரும்பவில்லை என்று கூறி விட்டான். மன்னன் அசோகனை அழைத்து வரச் சொன்னான். பிறகு–)

அசோகன் வந்ததும் பிந்துசாரன் அவனைத் தன் படுக்கையருகே உட்காரச் சொல்லி ''மகனே! அரச குமாரர்கள் போரில் வெற்றி பெறுவதும் நிர்வாகத்தைச் சீர் திருத்தி நடத்தத் தெரிந்து வைப்பதும் அவர்களது இரு கண்களுக்குச் சமமாகும். அவற்றில் அவர்கள் திறமை பெற்றிருக்க வேண்டும். நீ முதலாவதில் திறமை பெற்றவனென்று நிரூபித்து விட்டாய். இரண்டாவது விஷயத்திலும் நீ உன் திறமையைக் காட்ட வேண்டும்'' என்றான்.

அசோகனும் ''அதை எவ்வாறு நான் காட்ட வேண்டுமென்று ஆணையிடுங்கள்'' என்று கூறவே பிந்துசாரனும் ''உஜ்ஜயினியில் என் பிரதிநிதியாக இருந்து ஆட்சியை மேற்பார்வை பார்த்து வந்தவன் திடீரென இறந்து விட்டான். அதனால் நீ அங்கு சென்று ஆட்சிப் பொறுப்பை மேற்கொள்ள வேண்டும்'' என்றான்.

அசோகனும் ''தந்தையே! தங்களது



கட்டளைப்படியே நடக்கிறேன்'' எனவே பிந்துசாரனும் ''மிக்க மகிழ்ச்சி. க்ஷிப்ரா நதிக்கரையில் அமைந்த அந்த நகரில் நம் அதிகாரிகள் பலர் உள்ளனர். வேண்டுமானால் நீ இங்கிருந்து உனக்கு நம்பிக்கையான சிலரையும் அழைத்துக் கொண்டு போகலாம். நீ விரைவில் உஜ்ஜயினிக்குச் செல்ல வேண்டும்'' என்றான்.

அசோகனும் அவ்வாறே செய்வதாகக் கூறி விட்டுத் தன் தாயைச் சந்திக்கச் சென்றான். சுபத்திரையும் தன் மகன் உஜ்ஜயினிக்குப் போகப் போகிறான் என்பதை அறிந்ததும் ''மகனே! உன்னை விட்டுப் பிரிந்திருக்க வேண்டுமே என்று கவலையாக இருக்கிறது. ஆனாலும் நீ இங்கே இருப்பதை விட உஜ்ஜயினியில் இருப்பதுதான் நல்லது என்று நினைக்கிறேன். இங்கு உனக்கு பயங்கரமான எதிரிகள் இருக்கிறார்கள். அவர்கள் அங்கும் வந்து உனக்குத் தீங்கிழைக்க முயலலாம். அதனால் நீ எப்போதும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நீ க்ஷேமமாக இருக்க வேண்டுமென என் ஆசிகளை அளிக்கிறேன்'' என்றாள்.

மறுநாள் அசோகன் தன்னுடன் நூறு பேர்களை அழைத்துக் கொண்டு உஜ்ஜயினிக்குக் கிளம்பினான். அவன் தன் தாயார் சொன்னதை நன்கு நினைவில் வைத்து கொண்டு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். அன்று மத்தியானம் விதிஸா பள்ளத்தாக்கிலுள்ள ஒரு அழகிய சிறு கிராமத்தை அடைந்தான். அந்த கிராமத்தைச் சுற்றி மலைகள் இருந்தன. அங்கு பல ஆலயங்களும் ஒரு பௌத்த விஹாரமும் இருப்பதை அவன் கண்டான். அந்த கிராமத்தில் புத்தர் பிறந்த சாக்கிய வம்சத்தைச் சேர்ந்த சில குடும்பங்கள் இருந்தன.

விதிஸா பள்ளத்தாக்கிலுள்ள சாக்கியர்களின் தலைவன். அசோகனை வரவேற்றுத் தன் இல்லத்திற்கு வந்து தங்கும்படி வேண்டினான். ஆனால் அசோகன் தன் ஆட்களுடன் கிராமத்து மைதானத்தில் கூடாரங்கள் போட்டுத் தங்கவே விரும்பினான். அதற்கான இடமும் தேர்ந்தெடுக்கப்பட்டது. அசோகனும் தன் கூடாரத்தில் தங்கி இளைப்பாறலானான். அன்றிரவை அவன் அந்த கூடாரத்தில் கழித்தான்.

காலையாகும் போது அவன் கண் விழித்தான். மெதுவாக எழுந்து கூடாரத்திற்கு வெளியே வந்தான். எங்கும்

மூடுபனி படர்ந்திருந்தது. அமைதியான அந்தச் சுற்றுப் புற சூழ்நிலையில் கொஞ்ச தூரம் நடந்து போய் விட்டு வரலாமென அவனுக்குத் தோன்றியது. தன் கூடயாரும் வர வேண்டாம் என்று சொல்லிவிட்டு அவன் இயற்கையின் அழகை ரசித்த வாறே காலடி எடுத்து வைக்கலானான்.

''நில்லுங்கள்'' என்று திடீரென்று ஒரு குரல் அவனுக்குக் கட்டளை இடுவது போலக் கேட்டது. தனக்கு இவ்வாறு இனிய குரலில் கட்டளை இடுவது யார் என்று அவன் பார்த்தான். சற்று தூரத்தில் அழகிய பெண் ஒருத்தி தென்பட்டாள். வெண்மையான பனித் திரைக்கு நடுவே அவள் அப்போதுதான் ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த தேவ கன்னிகை போலத் தென்பட்டாள். ''உங்களை நிறுத்தியதற்கு என்னை மன்னியுங்கள். உங்களுக்கு முன் ஒரு பெரிய பள்ளம் இருக்கிறது பாருங்கள்'' என்றாள் அவள்.

அப்போது மூடு பனி மெதுவாக விலக ஆரம்பித்திருந்தது. அசோகன் சட்டெனத் திரும்பிப் பார்த்தான். அங்கே கிடு கிடு பள்ளம் இருந்தது. தான் அந்தப் பள்ளத்தின் ஓரத்தில் நின்று கொண்டிருப்பதை அவன் கவனித்தான். அது கண்டு அவன் திகைத்துப் போனான். இன்னும் ஒரு அடி எடுத்து வைத்திருந்தால் அவன் அந்தப் பள்ளத்தில் விழுந்திருக்க வேண்டியவன்தான்.

அசோகன் அந்தப் பெண்ணருகே போய் நிற்கவே அவளும் ''தங்களுக்கு ஏதாவது இடைஞ்சல் செய்து விட்டேனா இளவரசே! என்னை மன்னி



யுங்கள்'' என்றாள். அசோகனும் ''நான் மன்னிப்பதா? என்னை நீயல்லவா காப்பாற்றி இருக்கிறாய். நான் உயிரோடு இருப்பதே உன்னால் தானே'' என்றான். அதற்கு அந்தப் பெண் ''உங்களைக் காப்பாற்றியது நானல்ல. சாக்கிய முனி புத்தர் பிரானின் அருளால் நீங்கள் காப்பாற்றப் பட்டிருக்கிறீர்கள்'' என்றாள்.

அசோகனும் ''அது சரி. நீ யார்? இந்த வேளையில் நீ இங்கு எப்படி வந்தாய்'' என்று கேட்டான். அவளும் ''இந்தப் பகுதியின் பெயரான விதிஸா தான் என் பெயரும். இங்குள்ள சாக்கியர்களின் தலைவர் என் தந்தை. ஒரு குகையிலுள்ள வயதான புத்த பிக்ஷு ஒருவருக்கு பணிவிடை புரிந்து விட்டுத் திரும்பிப் போய் கொண்டிருக்கிறேன்'' என்றாள்.

விதிஸாவின் பேச்சும் தோற்றமும் அசோகனை மிகவும் கவர்ந்து விட்டன. அவளது சாந்த வடிவமான முகம் அவனுக்கு மன நிறைவைத் தந்தது. அவனும் ''இளவரசி விதிஸா! நான் உனக்கு எப்படி நன்றி கூறுவது என்று எனக்குத் தெரியவில்லை'' என்றான். விதிஸாவும் ''நான் இளவரசி அல்ல. மேலும் உங்கள் உயிரைக் காப்பாற்றியது நானல்ல என்பதனையும், நான் புத்தர் பிரானின் பக்தருக்குப் பணி செய்து வந்த போது அவரது அருளால் தான் தங்களைக் காப்பாற்ற முடிந்தது என்பதனையும் நினைவில் கொள்ள வேண்டும்'' என்று கூறிவிட்டுச் சென்றாள்.



அசோகன் மீண்டும் இயற்கையின் அழகைக் கண்டு ரசிக்கலானான். இயற்கைதான் என்னென்ன அழகான காட்சிகளைக் காட்டுகிறது! எல்லாம் அந்த இறைவனின் அருள்தான். ஆனால் மனிதனால் கட்டப்பட்ட அரண்மனைக்குள் பொறாமை, வெறுப்பு, பகைமை, ஆசை, போட்டி என்பன தானே காணக் கிடைக்கின்றன! இவ்வாறு யோசித்தவாறே அசோகன் தன் கூடாரத்திற்குத் திரும்பி வந்தான்.

அன்று முழுவதும் அங்கேயே தங்கி விட்டு மறுநாள் உஜ்ஜயினிக்குக் கிளம்புவது என்று அசோகன் தீர்மானித்தான். அவன் வீரர்களிடம் அதைக்கூறி ''நாளை நாம் இங்கிருந்து கிளம்புகிறோம். அதனால் இன்று என் அமைதிக்கு பங்கம் விளைவிக்காமலும் இந்த ஊராருக்குத் தொல்லை கொடுக்காமலும் உங்கள் இஷ்டப்படி திரியுங்கள்'' என்று கூறினான்.

அதன்பின் அவன் நதியில் குளித்து விட்டு மலைப் பகுதியைச் சுற்றிப் பார்க்கலானான். அவனது வீரர்கள் அப்பகுதியைச்சுற்றிப் பார்த்த போது அவர்களுக்கு அவ்வூர் எல்லையில் மூன்று நடன மாதுகள் தென்பட்டனர். அவர்களுடன் வாத்தியங்கள் வாசிப்போர் சிலரும் இருந்தனர். அவர்கள் அசோகனின் வீரர்களைத் தங்கள் ஆடல் பாடல்களால் மகிழ்வித்தார்கள். அவர்கள் ஆடிப் பாடி முடிந்ததும் வீரர்கள் அவர்களைத் தம் கூடாரங்களுக்கு வந்து உணவு அருந்தும்படிச் சொன்னார்கள்.

அதைக் கேட்ட அந்த நடன மாதுகள் மிகவும் மகிழ்ந்து போய் ''ஆகா! இது எங்கள் அதிர்ஷ்டமே. நாங்கள் கண்டிப்பாக வருகிறோம். நீங்கள் அனுமதித்தால் நாங்களே சமையல்



வைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கு மென்றும் அவன் எண்ணினான். அதனால் சாக்கியத் தலைவனின் அழைப்பை ஏற்றுக் கொண்டான்.

அன்றிரவு அவனுக்கு அறுசுவை உணவு கிடைத்தது. எல்லா உணவுப் பண்டங்களையும் விதிஸாவும் அவளது தாயாரும் தயாரித்திருந்தார்கள். விளக்கின் ஒளியில் விதிஸாவின் சாந்தமான முகத்தைக் கண்டு அசோகனின் மனம் புல்லரித்தது.

சாப்பிட்டு முடிந்ததும் ஆகாயத்தில் கரு மேகங்கள் சூழ்ந்து எங்கும் இருட்டாகியது. சாக்கியர் தலைவன் தன் நண்பர்களுடன் தீவட்டிகளைப் பிடித்து அசோகனுக்கு வழி காட்டியவாறே அவனது கூடாரத்தில் கொண்டு போய் விட்டான்.

அசோகன் தன் கூடாரத்தை அடைந்த சற்று நேரத்திற்கெல்லாம் இலேசாக மழைத் துளிகள் விழலாயின. அவன் தன் படுக்கையில் படுத்துக் கொண்டு உறங்கினான். நடுராத்திரியின் போது அவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில் திடீரென கீச்சென்று ஒரு குரல் கேட்டது. அதைக் கேட்டு திடுக்கிட்டு அவன் எழுந்தான்.

கூடாரத்துள் இரு கரிய உருவங்களை அவன் கண்டான். அவற்றில் ஒன்றின் கையில் பளபளவென மின்னும் கத்தி இருப்பது தெரிந்தது. அதைக் கண்ட அசோகன் சட்டெனத் தன் படுக்கையிலிருந்து துள்ளிக் குதித்துத் தன் வாளை எடுத்துக் கொண்டு அந்தக் கரிய உருவத்தின் மீது பாயப் போனான். அப்போது அந்த இரு உருவங்களும் கூடாரத்திற்கு வெளியே பாய்ந்து ஓடத் தொடங்கின.

கூடச்செய்கிறோம்'' என்றார்கள். வீரர்களும் அவர்களே சமைக்கலாம் என்று தம் இசைவைத் தெரிவித்தார்கள்.

அன்று மாலை சாக்கியர்களின் தலைவன் வந்து அசோகனிடம் அன்றிரவு தன் வீட்டிற்கு வந்து அவன் அளிக்கும் விருந்தை ஏற்க வேண்டினான். அசோகன் சற்று யோசனையில் ஆழ்ந்தான். முன்பின் தெரியாதவர்கள் கொடுக்கும் எந்த உணவுப் பொருளையும் ஏற்று உண்ணக் கூடாது என்று சேனாதிபதி கூறியது நினைவிற்கு வந்தது. சாக்கியர்களின் தலைவனை அவன் இதற்கு முன் பார்த்துப் பேசி பழகியது இல்லை என்றாலும் அவன் கள்ள மற்ற உள்ளம் கொண்டவன் என்று அசோகனின் மனம் கூறியது. மேலும், அவனது இல்லத்திற்குச் சென்றால் அவனது மகள் விதிஸா

அசோகன் தன் மெய்க் காவலாளிகளை உரத்த குரலில் கூப்பிட்டான். அத்துடன் நில்லாமல் அவனே அந்த உருவங்களைத் துரத்திக் கொண்டும் ஓடினான். ஆனால் தனக்கும் முன்னால் ஒருவன் அந்த உருவங்களைத் துரத்திக் கொண்டு ஓடுவதை அசோகன் கண்டான். அசோகன் ஒரு கரிய உருவத்தைக் கீழே விழ வைத்துப் பிடித்து விட்டான். அதே சமயம் மற்ற மனிதனும் இரண்டாவது கரிய உருவத்தைப் பிடித்து விட்டான். பிடிபட்ட இரு உருவங்களும் பெண்களே.

அப்போதுதான் சில மெய்க் காவலாளிகள் ஓடி வந்தார்கள். வானத்தில் மேகங்கள் கலைந்து சந்திரன் தன் ஒளியை வீசிக் கொண்டிருந்தான். பிடிபட்ட அந்த இரு பெண்களை கண்டு அந்த வீரர்கள் திகைத்துப் போனார்கள். ஏனெனில் அவர்கள் தாம் அன்று பகலில் தம் ஆடல் பாடல்களால் வீரர்களை மகிழ்வித்தவர்கள். அவர்கள் இளவரசனைக் கொல்லத்தான் வந்திருக்கிறார்கள் என்பது தெரிந்து போயிற்று. அப்படியானால் அந்த நடுராத்திரியில் கீச்சென்ற குரலில் கத்தி அசோகனைத் தூக்கத்திலிருந்து எழுப்பியது யார்?

தனக்கும் முன்னால் அந்தக் கரிய உருவங்களில் ஒன்றைப் பிடித்தவன் யார்? அசோகன் அவனைக் கூர்ந்து பார்த்தான். அவன் வேறு யாருமில்லை விதிஸாவேதான். அவளும் ஆச்சரியப்பட்டு நின்ற அசோகனிடம் ''பகலெல்லாம் தன் ஆடல் பாடல்களால் உங்கள் வீரர்களைக் கிறங்க வைத்த இந்த நடனக்காரிகளைக் கண்டு என் மனதில் ஏனோ சந்தேகம்



தோன்றியது. அவர்கள் சதிகாரிகள் போலத்தான் என் மனதில் பட்டது. அவர்களது சாமர்த்தியத்தையும் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்வதையும் கண்டு என் சந்தேகம் மேலும் வலுத்தது. நான் புத்த பிக்ஷுவுக்குப் பணிவிடை செய்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த போது இவர்கள் சில வீரர்களுடன் ஒரு மலை மீது ஏறுவதைக் கண்டேன். அப்போது இவர்களை நான் எதிர்த்திருந்தால் என்னைக் கொன்றே போட்டிருப்பார்கள். அப்போது நல்ல வேளையாக என் சகோதரன் யசனைக் கண்டேன். அவனை மலை அடிவாரத்தில் இருக்கச்சொல்லிவிட்டு நான் இந்தப் பெண்களையும் மறைந்தவாறே கண்காணித்துக் கொண்டு சென்றேன். அவர்களில் ஒருத்தி உங்கள் கூடார வாசலுக்கு

வந்து ஒரு கத்தியைக் கையில் எடுப் பதைக்கண்டேன். அதைக்கண்டுதான் நான் பலமாகக் கத்தினேன்'' என்று கூறினாள்.

அப்போது அவன் ''ஆகா! இப் போது என்னை இரண்டாவது தடவை யாக மரணத்திலிருந்து காப்பாற்றி இருக்கிறாய்'' என்றான். அதற்கு அவள் ''நான் காப்பாற்றவில்லை. புத்தரின் அருளால்தான் நீங்கள் உயிர் தப்பினீர்கள் என்று மீண்டும் நான் கூறு கிறேன்'' என்றாள்.

அசோகன் யோசித்தவாறே தன்னைக் கொல்ல முயன்ற அந்தப் பெண்களைப் பார்த்தான். பிறகு அவன்தன்கூடாரத்திற்குள் சென்றான். இரண்டு பெண்கள் அகப்பட்டார்கள். அவர்களைச் சேர்ந்த வீரர்களைத் தேடிக்கொண்டு அசோகனின் வீரர்கள் நாற்புறமும் சென்றனர். ஆனால் அவர் களுக்கு ஒருவன் கூடக் கிடைக்க வில்லை.

மலையடிவாரத்தில் நின்று கொண் டிருந்த விதிஸாவின் சகோதரன் யசன் சற்று தூரத்திலிருந்த ஒரு புதரில் ஒரு வன் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவனும் யசனைப் பார்த்து விட்டான். அதனால் அவன் ஆற்றில் குதித்து தப்பி ஓட முயன்றான். ஆனால் அதற்கு முன் யசன் அவனைப் பிடித்து விட்டான்.

பிடிபட்டவனையும் அந்த இரு நடனக்காரிகளையும்கட்டி இழுத்துக் கொண்டு போய் வீரர்கள் அசோகனின் முன் நிறுத்தினார்கள். அப்போது சாக் கியர்கள்தலைவனும் வேறு சில பிரமு கர்களும் அசோகனின் கூடாரத்திற்கு வந்தார்கள். அந்தப் பெண்கள் அசோ கனின் வீரர்கள் உண்ட உணவில் மயக்க மருந்தைக் கலந்திருந்தார்கள் என்பது விசாரணையின் போது தெரிய வந்தது. அதனால்தான் அசோகனின் மெய்க் காவலாளிகள் அவன் கூப் பிட்ட போதும் வர முடியாமல் தம் நினைவை இழந்து விழுந்து கிடந் தார்கள்.

இதையெல்லாம் கேட்ட விதிஸா வின் தந்தை ''இவர்களது சதி அம்பல மாகி விட்டது. ஆனால் இவர்களை இவ்வாறு செய்யத் தூண்டியவர்கள் யாரென்று தெரிந்தாக வேண்டும்'' என் றான். யசனும் ''ஆமாம். அது மிகவும் முக்கியம்'' என்று கூறினான்.

**(தொடரும்)**





# நட்பு முறிந்தது!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர இரவில் மயானத்தில் நீ இவ்வளவு சிரமப்படுவதைப் பார்த்தால் யாரோ ஒரு பண்டிதரோ அல்லது மேதாவியோ உன்னிடம் உதவி கேட்டிருக்கிறாரோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஆனால் இப்படிப்பட்டவர்களிடம் நீ மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஏனெனில் சுய நலக்காரப் பாமரர்களை விட இந்தப் படித்தவர்களான சுயநலக்காரர்களிடமிருந்து தான் அதிகமாய் ஆபத்து ஏற்படும். இதற்குப் பிறந்தது முதல் மக்காக இருந்த ஒருவன் திடீரென மேதாவியாக மாறி முடிவில் தனக்கு உதவிய

## வேதாளம் சொல்லும் கதை



பிசாசிற்கே தீங்கு விளைவித்தான். அவன் கதையைக் கூறுகிறேன். கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

விதர்ப்ப நாட்டில் விந்தன் என்ற இளைஞன் இருந்தான். அவன் தன் சிறு வயதில் தாய் தந்தையரை இழந்த வன். அதனால் அவன் தன் தாய்மாமன் வீட்டில் வளர்ந்து வந்தான். அவன் மகா மக்கு. படிப்பு சற்றும் அவனுக்கு ஏறவில்லை. அவன் வயதுப் பையன் களெல்லாம் படித்து முன்னுக்கு வந்து அரசாங்கத்தில் பெரும் பதவிகளில் இருந்தார்கள். ஆனால் விந்தன் மட் டும் மக்காவே இருந்தான்.

அவனது தாய்மாமன் தன் விகார மான பெண்ணை விந்தனுக்குக் கல் யாணம் செய்து வைத்தான். விந்த னுக்கு அரச சபையில் உத்தியோகம் பெற வேண்டுமென்ற ஆசை இருந் தது. அதற்கான தகுதி இல்லாது போனாலும் படிப்பை நிறுத்த வில்லை. அவனது முட்டாள்த் தனத்தை அவனது நண்பர்கள் கேலி செய்து வந்தார்கள். ஆனாலும் எல் லோரும் அவனை நேசித்தார்கள். ஏனென்றால் அவனுக்கு எதற்கும் யாரிடத்திலும் பயமே கிடையாது.

ஒருநாள் விந்தனிடம் அவனது நண்பர்கள் ''நீ பயமே இல்லாதவன் என்கிறாயே. நம் ஊருக்கு வெளியே யுள்ள பாழடைந்த கோட்டைக்குள் போய் இருந்து விட்டு வர முடியுமா? அங்கு பிசாசுகளின் நடமாட்டம் இருக் கிறது. அங்கு போனவர்கள் யாரும் திரும்பி வந்ததே இல்லை. நீ போய் ஒரு இரவுப் பொழுதை அங்கே கழித்து விட்டு அங்கிருந்ததற்கு அடை யாளமாக ஏதாவது ஒரு பொருளைக் கொண்டு வந்து காட்ட வேண்டும். உன்னால் முடியுமா?'' என்று கேட் டார்கள்.

விந்தனும் அந்த சவாலை ஏற்று ஒரு நாளிரவில் அந்தப் பாழடைந்த கோட்டைக்குச் சென்றான். பயங்கர இரவில் இருட்டில் அவன் அந்தக் கோட்டை முழுவதையும் சுற்றிப் பார்த்தான். அப்போது அவன் கால் ஒரு பொருளின் மீது இடறவே அவன் அதை எடுத்துப் பார்த்தான். அது ஒரு மண்டை ஓடு. அதை அவன் தான் அக்கோட்டைக்குள் சென்றதற்கு அடையாளமாக எடுத்துக் கொண்டு திரும்பி வந்தான்.

அவன் அதைத் தன் நண்பர்களிடம் காட்டிய போது அவர்கள் பயந்து போய் அதைத் தூர எறிந்து விடும்படி

விந்தனிடம் கூறினார்கள். ஆனால் விந்தன் அவர்கள் சொன்னபடி செய்யாமல் அதைத் தன் வீட்டிற்கு எடுத்துப் போய் பரணில் ஒரு மூலையில் வைத்தான். அன்றிரவு அவன் தூங்குகையில் ஏதோ சத்தம் ஏற்பட்டது கேட்டுக் கண் விழித்துப் பார்த்தான். அந்த மண்டை ஓடு இருந்த இடத்தில் ஒரு பயங்கர உருவம் நின்று கொண்டிருந்தது.

அந்த உருவத்தின் உடல் பித்தளை நிறத்திலும், தலை, தாடி, கண்கள் வெள்ளியின் நிறத்திலும் இருந்தன. கண்கள் இரு நெருப்புத் துண்டங்கள் போலத் தென்பட்டன. விந்தன் அந்த உருவத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்த உருவமும் ''உன் தைரியத்தையும் துணிச்சலையும் பாராட்டுகிறேன். எனக்கு உன் வீட்டில் புகலிடம் அளித்தாய். அதனால் நீ எப்போது என்னை நினைத்தாலும் நான் உன் முன் தோன்றுவேன். நாம் இருவரும் பேசிப் பொழுதையும் போக்கலாம். ஒருவேளை உனக்கு பயமாக இருந்தால் நீ இதை எடுத்து வந்த இடத்திலேயே கொண்டு போய்ப் போட்டு விடு. இதன் பிறகு உன் முன் வரவே மாட்டேன்'' என்றது.

விந்தனும் ''எனக்கா பயம்? அதெல்லாம் இல்லை. அது சரி. நீ யார்'' என்று கேட்டான். அதுவும் ''என் பெயர் கோலன். அக்காலத்திலெல்லாம் நாங்கள் பல வித்தைகளைக் கற்றுக் கொள்வோம். எனக்குப் பிடித்தமானது அறுவை சிகிச்சை'' என்றது. இதற்குள் விடிந்து போய் விடவே கோலன் மறைந்து விட்டான்.



மறு நாளிரவில் விந்தன் கோலனை நினைக்கவே அவனும் அவன் முன் நின்றான். இருவரும் சேர்ந்து பாழடைந்த கோட்டைக்கு அருகிலுள்ள அம்மன் கோவில் மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அது முதல் தினமும் இரவில் அங்கு வந்து பேசிப் பொழுதைப் போர்க்கலானார்கள்.

சில நாட்கள் கழிந்த போது விந்தனின் மனைவி அவன் இரவில் எங்கோ போய் விட்டு வருவதைக் கவனித்தாள். ஒருநாள் அதற்கு என்ன காரணமென்று அவள் அவனிடம் கேட்டாள். அவனும் உண்மையைக் கூறினான். அது கேட்டு அவள் ''ஐயோ! ஒரு பிசாசுடனா உங்களுக்கு நட்பு? வேண்டாம். இது ஆபத்தானது. இந்த நட்பை



உதறித் தள்ளுங்கள்'' என்று அவனிடம் வேண்டினாள்.

விந்தனும் ''எனக்குக் கெடுதல் செய்வதாக இருந்தால் அந்தப் பிசாசு எப்போதோ அதைச் செய்திருக்கும். இப்போது அதன் உறவைத் துண்டித்துக் கொண்டால் அது எனக்குக் கெடுதல் செய்தாலும் செய்யலாம். அதனால் இப்படியே இருக்கட்டும்'' என்றான்.

சில நாட்களில் கோலனுக்கு விந்தன் மகாமக்கு என்று தெரிந்து போயிற்று. அதனால் கோலன் அவனுக்குத் தனக்குத் தெரிந்ததைச் சொல்லி கொடுக்க முயன்றான். ஆனால் விந்தனின் மரமண்டையில் எதுவும் ஏறவில்லை. அவனுக்கு எதையும் கிரகிக்கும் சக்தி இல்லை என்பதைக் கோலன் புரிந்து கொண்டு விட்டான்.

ஒருநாள் கோலனுடன் சதுரங்கம் விளையாடிய போது விந்தன் வெகு சீக்கிரத்தில் தோற்று விட்டான். கோலனுக்குக் கோபம் வந்தது. அவன் உடனே மாயமாய் மறைந்து போனான். தன் அறிவின்மையை நொந்து கொண்டு விந்தன் உடனே தன் வீட்டிற்கு வந்து படுத்துத் தூங்கினான். தூக்கத்தின் நடுவே அவனுக்கு திடீரென கடுமையான வலி ஏற்பட்டது. அவன் கண் விழித்துப் பார்த்த போது கோலன் நின்று கொண்டிருந்தான்.

கோலனின் கையில் கத்தியும் அதில் ரத்தக்கறை படிந்திருப்பதையும் விந்தன் கவனித்தான். ரத்தத்தைக் கண்டு விந்தன் தன் நினைவை இழந்து விட்டான். சற்று நேரத்திற்குப் பிறகே அவனுக்கு சுயநினைவு வந்தது. அவன் கண் திறந்து பார்த்த போது கோலன் அவன் முன் நின்று சிரித்தவாறே ''பயப்படாதே. உனக்கு ஒரு ஆபத்தும் இல்லை உனக்கோ மூளை இல்லை. நீ என்னுடன் சதுரங்கம் விளையாடவும் மற்ற செயல்கள் செய்யவும் மூளை உடையவனாய் இருக்க வேண்டும். அதனால் உன்னை இப்போது அறிவுள்ள மேதையாக ஆக்கி விட்டேன்'' என்றான்.

கொஞ்சகாலத்தில் விந்தன் எல்லா சாஸ்திரங்களையும் கற்று விட்டான். அவனது கூரிய அறிவு கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அரச சபையில் அவனுக்கு உயர்ந்த உத்தியோகமும் கிடைத்தது. தன் கணவனிடம் ஏற்பட்ட மாறுதலுக்குப் பிசாசு தான் காரணமென்று அவன் மனைவி

ஊகித்து விட்டாள்.

ஒரு நாளிரவு விந்தன் கவலையாக இருப்பதைக் கண்ட கோலன் அதற்கு என்ன காரணம் என்று கேட்டான். விந்தனும் ''எனக்கு விவரம் தெரியாத வயதில் என் திருமணம் நடந்தது. என் மனைவி பார்க்க விகாரமாக இருக்கிறாள். ஆனாலும் அவளை வெறுக்காமல் விரும்பியே வருகிறேன். அவளது உடல் நன்றாக இருந்தும் முகம் பார்க்க சகிக்காமல் இருக்கிறது. அது மட்டும் மாறி இருந்தால் அவள் மிக அழகாக இருப்பாளே'' என்றான்.

கோலனும் ''உன் மனைவியைப் பேரழகியாக மாற்ற என்னால் முடியும். அதற்கு சிறிது காலம் பிடிக்கும். உன் மனைவியின் வயது, உயரம், உடல் நிறம் இவையாவும் சரியாக இருக்கும் ஒருத்தியின் முகம் கிடைக்க வேண்டும். அதைத் தேடுகிறேன்'' என்றான். விந்தனுக்குக் கோலன் சொன்னதன் அர்த்தம் தெரியவில்லை. ஆயினும் ''சரி, பார்'' என்று கோலனிடம் கூறினான்.

ஒரு மாத்திற்குப் பிறகு ஒருநாள் கோலன் தூங்கிக் கொண்டிருந்த விந்தனை எழுப்பி ''இப்போது போய் உன் மனைவியைப் பார்'' என்றான். அடுத்த அறையில் படுத்திந்த தன் மனைவியைக்காணப் போன விந்தன் ஆச்சரியப்பட்டான். ஏனெனில் அவன் மனைவி அப்சரப் பெண் போல அழகாக இருந்தாள்.

மறுநாள் காலை விந்தனின் மனைவி தன் அழகைக் கண்ணாடியில் கண்டு ஆச்சரியத்துடன் கத்தினாள். விந்தனும் அவளுக்கு அந்த அழகைத் தந்தவன் கோலன் என்று கூறி



னான்.. அது கேட்டு அவள் மகிழ்ச்சி அடையாமல் இது ஆபத்தானது என்று கூறினாள்.

இரண்டொரு நாட்களுக்குப் பின் விந்தனுக்கு தன் அண்டை நாட்டில் ஒரு ஸ்திரீ கொலை செய்யப்பட்டாள் என்றும் அவளது தலை இப்போது தன் மனைவிக்குள்ள தலைபோல இருந்தது என்று தெரிய வந்தது. அவளை யாரோ கொன்று அவளது தலையை மட்டும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்களாம். அவளது கணவன் தன் மனைவியைக் கொன்றவனைத் தேடிக் கொண்டு வருகிறானாம். அவன் எந்த நிமிடமும் விந்தன் இருந்த ஊருக்கு வரக் கூடும்.

அன்றிரவு கோலனைச் சந்தித்த விந்தன் எப்படித் தன் மனைவியை அழகியாக மாற்றினான் என்று கேட்



கவே ''உன்னை அறிவாளியாக மாற்றியது போல அறுவைச் சிகிச்சையால் தான் இதையும் செய்தேன். வேறொருவரின் மூளையை எடுத்து வந்து உன் தலையைப் பிளந்து உன் மூளையை எடுத்து விட்டு நான் எடுத்து வந்த மூளையை வைத்துத் தைத்து விட்டேன். அது போலத்தான் அண்டை நாட்டிலிருந்த அழகிய பெண்ணின் தலையை எடுத்து வந்து உன் மனைவியின் விகாரத் தலையை எடுத்து விட்டு நான் எடுத்து வந்த தலையைப் பொருத்தி வைத்தேன்'' என்றான்.

விந்தனும் ''நீயா அப்பெண்ணைக் கொலை செய்தாய்?'' எனவே கோலனும் ''இல்லை வேறு யாரோ கொலை செய்தான்'' என்றான். அப்போது விந்தன் ''இப்போது அந்தப் பெண்ணின் கணவன் கொலையாளியைத் தேடிக் கொண்டு இந்த நகருக்கு வந்து கொண்டிருக்கிறானாம். அவன் என் மனைவியைக் கண்டு விட்டால் அவளைத் தன் மனைவி என்று கூறி அழைத்துப் போய் விடுவானே'' என்றான்.

கோலனும் ''அப்படி எதுவும் நடக்காது. அவன் உன் வீட்டிற்கு வந்து உன்னிடம் தன் மனைவியைக் கொடு என்ற கேட்கும் போதே நான் அவன் தலையை வெட்டி எடுத்துப் போய் விடுகிறேன். அதை வேறு ஏதாவது உடலில் பொறுத்தி விடுகிறேன்'' என்றான்.

விந்தனும் ''அப்போது தலை இல்லாத அவனது உடல் என் வீட்டின் முன் கிடக்குமே. என்னைக் கொலையாளி என்று அரசாங்க வீரர்கள் பிடித்துப் போய் விடுவார்களே'' என்றான். கோலனும் ''கவலைப்படாதே. அப்போது நான் சாட்சி கூறி உன்னை நிரபராதி என நிரூபித்து விடுகிறேன்'' என்றான்.

விந்தனோ ''நீயோ பிசாசு. எப்படி நீதிமன்றத்தில் சாட்சியாக வர முடியும்? உன்னைக் கண்டாலே எல்லோரும் பயப்படுவார்கள். மேலும் நீ சொல்வதை நம்பவும் மாட்டார்கள்'' என்றான். கோலனும் ''இது பற்றி இப்போதே ஏன் கவலைப்பட வேண்டும்? அந்தப் பெண்ணின் கணவன் வந்தால் பார்த்துக் கொள்ளலாம். இப்போது வா, நாம் சதுரங்கம் விளையாடலாம்'' என்றான். விந்தனும் கோலனுடன் விளையாடி விட்டு வீட்டிற்குச் சென்றான்.

மறுநாள் காலை விந்தன் தன் வீட்டு பரணில் வைத்திருந்த மண்டை

ஓட்டை ஒரு பையில் போட்டு எடுத்துக்கொண்டு நகரிலிருந்து வெகுதூரத்திலுள்ள ஒரு மயானத்தை அடைந்தான். அங்கு ஆழமாக ஒரு குழியைத் தோண்டி அதற்குள் அந்த மண்டை ஓட்டை வைத்து மண்ணைப் போட்டு நிரப்பி நன்கு அமுக்கிச் சமதரையாக்கி விட்டு அவன் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தான். மறுநாள் தன் மனைவியுடன் அவ்வூரை விட்டே போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! விந்தனின் இச்செயல் விசித்திரமாக இல்லையா? கோலன் இரு முறைகளில் விந்தனுக்கு உதவினான். மூன்றாவது முறைகூட உதவுவதாகக் கூறினானே. அதுவரை விந்தன் தன் மனைவி கூறியது போல பிசாசுடன் நட்பை முறித்துக் கொள்ளவில்லை. ஆனால் மூன்றாவது முறையில் அவன் கோலனுடன் ஏற்படுத்திக் கொண்ட நட்பை முறித்துக் கொண்டானே. கோலன்தானே அவனை அறிவாளியாக்கினான்? அதற்கு விந்தன் இப்படியா நன்றி மறந்து நடந்து கொள்வது? எனது இக் கேள்விக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''விந்தனை நன்றி மறந்தவன் என்று கூற முடியாது? விந்தன் கோலனை நம்பி இருக்க வேண்டியதில்லை. கோலன்தான் விந்தனின் தயவில் இருந்து வரவேண்டும். கோலன் சுயநலம் கொண்டு தனக்குச் சமமாய் அறிவு படைத்தவனாய் விந்தன் இருந்து சதுரங்கம் விளையாட வேண்டுமென்றே அவனை அறிவாளியாக்கினான். ஆனால் விந்தன் தன் தலையில் வேறொருவரின் மூளை உள்ளது என அறிந்ததும் வேதனைப்பட்டான். அது போல அவன் தன் மனைவி அழகியான விதத்தையும் விரும்பவில்லை. மூன்றாவது முறை கோலன் தலை மாற்றம் செய்வது பற்றிக்கூறிய போது இன்னும் என்ன விபரீதம் நடக்குமோ என எண்ணியே விந்தன் கோலனுடன் ஏற்பட்ட நட்பை முறித்துக் கொண்டான். இது சரியானதே'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# இது தான் விஷயம்!

ராமகிருஷ்ண சாஸ்திரி புராண உபன்யாசங்களை மக்கள் மனம் மகிழச் செய்து வருபவர். அவரது உபன்னியாசம் என்றால் மக்கள் அதைக் கேட்க கூட்டமாகக் கூடி விடுவார்கள். ஜனரஞ்சமாகப் பேசி எல்லோரையும் மகிழ்விக்கும் அவரிடமிருந்த ஒரே குறை அவரது ஞாபக மறதிதான்.

ஒருமுறை ஒரு ஊரில் உபன்னியாசம் செய்ய அவர் சென்றார். கூட்டம் பெரிய அளவில் இருந்தது. அவரும் ''இன்று கோகுலாஷ்டமி. பகவான் கிருஷ்ண பரமாத்மா பிறந்தநாள். அவர் நமக்கு பகவத் கீதையை அளித்தவர். தர்மம் நசிந்து அதர்மம் தலை தூக்கும் போது அதை ஒழிக்கத்தான் அடிக்கடி அவதாரம் எடுப்பதாகக் கூறியவர்'' என ஆரம்பித்தார்.

அப்போது கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. சிலர் சிரிக்கவும் சிரித்தார்கள். ராமகிருஷ்ண சாஸ்திரிக்கு அது ஏன் எனப் புரியவில்லை. கூட்டத்தில் உட்கார்ந்திருந்த கிருஷ்ண சாஸ்திரியிடம் ''ஏன் எல்லோரும் இப்படிச் சிரிக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

கிருஷ்ண சாஸ்திரியும் ''ஒன்றுமில்லை. இன்று ராமநவமி. தாங்கள் ராம பிரானின் மகிமையைப் பற்றிப் பேச வேண்டும். ஞாபகம் பிசகாய் தாங்கள் இன்று கோகுலாஷ்டமி என எண்ணி கிருஷ்ண பகவானை பற்றிப் பேச ஆரம்பித்தீர்கள். இதுதான் விஷயம்'' என்றார்.

ராமகிருஷ்ண சாஸ்திரி திகைத்து நின்றார்!



# கடல் வழியே கோபால்பூருக்கு

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**




விசாகப்பட்டணத்திலிருந்து வடக்கே செல்லும் கடற்கரையோரப் பயணப் பாதை மிக நீளமானது. இருபத்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பீமுனிபட்டினம் என்னும் ஊர் கோஸ்தனி ஆற்றின் கடை முகத்தில் உள்ளது. 17வது நூற்றாண்டில் இது டச்சுக்காரர்களின் பலமான மையமாக இருந்தது. டச்சுக்காரர்களிருந்த பல நினைவுச் சின்னங்களும், பாழடைந்த கோட்டையும், சில பீரங்கிகளும் சமாதிகளுள்ள மயானமும் இன்றும் இங்கு காணக் கிடைக்கின்றன. கிழக்குக் கடற்கரையிலேயே மிக அழகான இந்தக் கடற்கரை பச்சைப் பசேலென்ற பனந்தோப்புகளுடனுள்ளதோடு இந்நகரம் சுற்றுலா மையமாகவும் விளங்குகிறது.

ஆந்திர பிரதேசத்தின் கடற்கரை ஸ்ரீ காகுளம் மாவட்டத்தோடு முடிகிறது. சூரியநாராயணன் என்னும் சூரியபகவானுக்குள்ள ஒரே ஆலயம் ஸ்ரீ காகுளம் மாவட்டத்திலுள்ள அரவல்லியில் உள்ளது. வருடத்தில் இரண்டு நாட்களில் இக்கோவிலிலுள்ள விக்கிரகத்தின் மீது சூரிய கிரணங்கள் விழும் விதத்தில் இக் கோவில் கட்டப் பட்டுள்ளது இந்தக் கோவில் கி.பி. 1778ல் யலமன்சிலி புல்லாஜி பந்துலுவால் புதுப்பிக்கப் பட்டது.

சூரிய நாராயணர் ஆலயம்





டச் சமாதி மயானம்



கூர்மம் (ஆமை)

நாம் செல்லும் அடுத்த இடம் ஸ்ரீ கூர்மம் (ஆமை) இதுவும் கடற்கரையில் அமைந்த ஊர். மகாவிஷ்ணு கூர்மாவதாரம் எடுத்தாரல்லவா? அந்தக் கூர்ம வடிவில் இங்கு விஷ்ணு ஆலயத்தில் வழிபாடு செய்யப்படுகிறார். இந்த ஆலயத்திள் குளமான அவேத புஷ்கரணியில் இறந்தவர்களின் அஸ்தியைக் கரைத்தால் அது ஆமையாகிவிடும் என்று நம்பப் படுகிறது.

கோதாவரியின் உப நதிகளில் ஒன்றான மச்குண்ட் என்னும் சிற்றாறு ஸ்ரீ காகுளமாவட்ட எல்லையில் பாய்ந்து ஆந்திரப் பிரதேசத்திற்கும் ஒரிஸ்ஸா மாநிலத்திற்கும் எல்லையாக உள்ளது மச்கண்ட் மின் நிலயம் 1955ல் இரு மாநிலங்களின் கூட்டு நிர்வாகத்தில் முதல் முதலாக ஆரம்பிக்கப்பட்ட ஒரு முயற்சியாம்.

ஆந்திர வட கடற்கரைப் பகுதியும் இன்றைய ஒரிஸ்ஸாவும் சேர்ந்துதான் முன் காலத்தில் கலிங்க தேசமாக இருந்தது. கலிங்கம் அந்நாட்களில் கடல் வணிகத்திற்குப் பெயர் பெற்றிருந்தது.

கலிங்கத்துக் கடல் வணிகக் கப்பல்

கலிங்கம் இலங்கை, பர்மா, இந்தோனேசியா மற்றும் பல தென் கிழக்கு ஆசிய நாடுகளுடன் வியாபாரம் செய்து வந்தது. இலங்கைக்கு முதன் முதலில் இங்கிருந்துதான் ஆரியர்கள் சென்றார்கள். வியாபாரம் பாலுரா, ஆல்பா, சரித்திரபுரம் ஆகிய துறை முகங்களின் வாயிலாக நடைபெற்று வந்தது.

இந்திய வரலாற்றில் கலிங்கம் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறது. ஏனெனில் கலிங்கப் போருக்குப் பிறகுதான் மாமன்னர் அசோகர் தன் நாட்டை விரிவு படுத்துவதைக் கைவிட்டு புத்த மதத்தைத் தழுவினார்.

கேசரி வம்சத்து மன்னர்களாலும் கங்கவம்ச மன்னர்களாலும் 4வது நூற்றாண்டு முதல் 13வது நூற்றாண்டு வரை ஒரிஸ்ஸா பெயர் பெற்று விளங்கியது. இந்தியா சுதந்திரம் அடைந்து இரண்டாண்டுகளுக்குப் பிறகு 1949ல் 26 சிறு பகுதிகள் ஒன்று சேர்ந்து இணைந்து ஒரிஸ்ஸா மாநிலம் இன்றுள்ளதாக ஆகியது.

பிரிட்டிஷ் ஆட்சியில் ஒரிஸ்ஸா தன் கடல் வியாபாரத்தை இழந்துவிட்டது. ஆயினும் ஒரியர்கள் தம் முன்னோர்களின் கடல் வணிகத்தை எண்ணி ஒவ்வொரு ஆண்டிலும் கார்த்திகைப் பௌர்ணமி யன்று பூடா பந்தன் என்ற கப்பல் பூஜையைச் செய்து வருகிறார்கள். அவர்கள் தம் முன்னோர்களைத் திருப்திப்படுத்தும் விதத்தில் சிறு படகுகளில் அகல் விளக்குகளை வைத்து ஆறுகளிலும் கடலிலும் மிதக்க விடு கிறார்கள்.

இங்கிலீஷ் கால்வாயைத் முதல் முதலாய் நீந்திக் கடந்த இந்தியரான மிஹிர் சென் பலுராவிலிருந்து இந்தோனேசியாவிற்கு முன் காலத்தில் சென்ற வழியில் போக ஒரு படகுப் பயணத்தை செய்தார். அவர் பயன் படுத்திய படகு முன் காலத்து கலிங்க மரக் கல வடிவில் 40 அடி நீளத்தில் இருந்தது.



பூடா பந்தனி வழிபாடு

தென் ஒரிஸ்ஸாவில் கோபால்பூர் அமைதியான அழகிய நகரம். இங்குள்ளவர்கள் பழங்காலப் பழக்க வழக்கங்களையே இன்னமும் பின்பற்றுகிறார்கள். பெண்கள் அதிகாலையில் எழுந்து வீட்டின் வாசலைப் பெருக்கி அரிசி மாவு கொண்டு கோலம் போடுகிறார்கள். அதிகாலையில் எழுந்து கடற்கரையில் நின்று ஒளியையும் வெப்பத்தையும் தரும் சூரியனின் வருகைக்காகக் காத்து கைகூப்பி சிரம் தாழ்த்தி வணங்கி நிற்கிறார்கள். சூரியோதயம் ஆகும் போது மலர்களால் அர்ச்சித்து தம் நன்றியைத் துதி பாடல்களால் வெளிப்படுத்துகிறார்கள். அதன் பின் கடலில் நீராடுகிறார்கள்.

பகலில் கடற்கரையில் பதிக்கப்பட்ட குச்சிகளும் இரவில் கலங்கரை விளக்கமும் மீனவர்களுக்கு வழிகாட்டுபவையாக உள்ளன. வங்காளத்திலும் ஆந்திராவிலுமுள்ள மீனவர்களைப் போலல்லாமல் இவர்கள் கூம்பு வடிவிலுள்ள தொப்பிகளை அணிகிறார்கள்.

**மீனவர்கள் மீன் படகுகளைக் கரைக்கு இழுத்தல்**





# எல்லாம் அவன் செயல்!

(முன் இதழின் தொடர்ச்சி)

தன்னிடமிருந்த வைரக் கல்லால் ஏழை மனிதன் மணிகண்டனின் காயத்தைத் தொட்டு குணப்படுத்திய பின் இருவரும் நெருங்கிய நண்பர்களாகி விட்டனர். வியாபாரியான மணிகண்டன் ஏழை மனிதனுக்குப் பல வியாபார ரகசியங்களைச் சொல்லிக் கொடுத்தான். தான் செய்த வியாபாரங்களையும் அவற்றில் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் அந்த ஏழை மனிதனிடம் விவரமாகக் கூறினான்.

ஏழை மனிதன் அவற்றையெல்லாம் கவனமாகக் கேட்டதோடு எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டான். அவன் சென்ற இடங்களிலெல்லாம் தானே முடிவெடுத்து வியாபாரத்தில் நல்ல லாபமும் அடைந்தான்.

ராட்சஸத் தீவிலிருந்து எடுத்து வந்த விலையுயர்ந்த பொருள்களை மூலதனமாகக் கொண்டு அவன் வியாபாரத்தைப் பெருக்கி ஏராளமாய் பொன்னும் மணிகளும் முத்துக்களுமாய்ச் சம்பாதித்தான். அவன் மணிகண்டனுக்குச் சிலவற்றைப் பரிசாக அளித்துவிட்டு அவனிடம் விடை பெற்றுக் கொண்டு தன் நாட்டிற்குச் சென்றான்.

அவன் தன் நாட்டில் அடி எடுத்து வைத்தபோது மன்னன் வைத்த காலக் கெடு முடிய இன்னும் பதினைந்து நாட்கள் இருந்தது. பணக்கார வியாபாரியாகி விட்ட அந்த ஏழை மனிதன் அத் தலைநகரில் ஒரு பெரிய மாளிகையை வாங்கி அதைப் புதுப்பித்தான். தனக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் வாங்கிக் கொண்டு அவன் சில வேலையாட்களையும் அமர்த்திக் கொண்டான். மன்னன் குறிப்பிட்ட காலம் முடியும் நாளன்று பல விலையுயர்ந்த பொருள்களை மன்னனுக்குக் காணிக்கையாக சமர்ப்பிக்க எடுத்துக் கொண்டு வேலைப்

—பாபாநாசம் சாமா—

பாட்டுடன் செய்யப்பட்ட அழகிய ஒரு குதிரை வண்டியில் அமர்ந்து அரண்மனைக்குச் சென்றான்.

அரண்மனையை அடையும்போது மன்னன் இரண்டு மாதங்களாகப் படுத்த படுக்கையாகக் கிடப்பதாகவும் அதற்குக்காரணம் அவன் முதுகில் எழுந்துள்ள ராஜபிளவை என்றும் ஏழை மனிதனுக்குத் தெரிய வந்தது.

அவன் உடனே தன் மாளிகைக்குத் திரும்பிப் போய் தான் ராட்சஸத் தீவில் கண்டெடுத்த மந்திர சக்தி வாய்ந்த வைரக் கல்லை எடுத்து கொண்டு அரண்மனைக்கு வந்தான். பட்டாடை உடுத்திப் பகட்டாய் வந்த அவனை அரண்மனைக் காவலாளிகள் மரியாதையுடன் போக விட்டார்கள்.

அவன் மன்னன் படுத்திருந்த அறைக்குள் சென்றான். அங்கு மன்னன் ஒருபுறமாகச் சாய்ந்து முனகிக் கொண்டிருப்பதைக் கண்டான். ஆறு மாதங்களுக்கு முன் அட்டகாசமாய் சிரித்து சவால் விட்ட மன்னனா இந்த நிலைக்கு வந்து விட்டான் என்று அந்த ஏழை மனிதன் எண்ணி மனம் வருந்தினான். ஏனெனில் அப்போது மன்னனுக்கு இருந்த உடற்கட்டு இப்போது இருக்கவில்லை. எலும்பும் தோலுமாகி மிகவும் தளர்ந்து போயுள்ளதை அவன் கண்டான்.

அந்த ஏழை மனிதன் தன் வைரக் கல்லை எடுத்து அந்த அறையில் தான் வந்ததைக் கூடப் பாராமல் ஒரு பக்கமாகப் படுத்திருந்த மன்னனை அணுகினான். அப்போதும் மன்னன் முனகியவாறுதான் இருந்தான். ஏழை மனிதன் தன் வைரக் கல்லை எடுத்து மன்னனின் முதுகிலிருந்த ராஜபிளவையின் மீது வைத்தான். மறு நிமிடம் அந்தப் புண் மறைந்தது. மன்னனின் உடல் முன் போலப் பொலிவுற்று விளங்கியது. அவனுக்கிருந்த வலியும் நின்றது.



திடீரென வலி நின்று தன் உடலில் ஏற்பட்ட மாற்றத்தைக்கண்ட மன்னன் ஆச்சரியப்பட்டுப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து சுற்றிலும் பார்த்தான். தன் எதிரே நின்ற ஏழை மனிதனை அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் யாரோ ஒரு பிரபு என எண்ணி விட்டான். அப்போது அவனது படுக்கையருகே நின்று கொண்டிருந்த பட்டத்து ராணி ஆனந்தக் கண்ணீர் வடித்தவாறே மன்னனிடம் ''இவர்தாம் உங்கள் நோயைப் போக்கி குணப்படுத்திய மகான்'' என்று வியாபாரி வேடத்தில் வந்திருந்த ஏழை மனிதனைச்சுட்டிக்காட்டி கூறினாள்.

மன்னன் அவனைப் பார்த்தான். அவனால் ஏழையை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவன் தன் இரு கைகளைக் கூப்பி அந்த ஏழை மனிதனை வணங்கி ''ஐயா! தாங்கள் யாரென்று தெரியவில்லையே, என் ராஜபிளவையைப் போக்கி குணப்படுத்திய உங்களுக்கு நான் எதை நீங்கள் விரும்பினாலும் கொடுக்கிறேன். தயவு செய்து தாங்கள் யாரென்றும் என்ன விரும்புகிறீர்களென்றும் கூறுங்கள்'' என்று வேண்டினான்.

ஏழை மனிதனும் ''அரசே! நாம் ஏற்கனவே அறிமுகமானவர்களே. ஆறு மாதங்களுக்கு முன் நாம் சந்தித்துப் பேசி இருக்கிறோம்'' என்றான். அப்போது மன்னன் ஏதோ நினைவிற்கு வந்தது போல ''ஓ! நீங்களா?... நீயா?'' என்று தடுமாறியவாறே கேட்டான். ஏழை மனிதனும் மன்னனைப் படுக்கையிலிருந்து எழுந்திருக்க வேண்டாமெனக் கூறி அதில் உட்கார வைத்து ''அரசே! இன்று நான் இவ்வளவு உயர்ந்த நிலைக்கு வந்துள்ளதற்கு காரணம் தாங்களே. அதற்காக நீங்கள் மரியாதை ஒன்றும் கொடுக்க வேண்டாம். நான் பழைய ஏழை மனி



தன்தான். அன்று என்னை நீங்கள் என்னை என்னப்பா... நீ என்று ஒருமையில் கூப்பிட்டது போல இன்றும் நீ என்றே சொல்லுங்கள். என்னைப் பற்றிய விவரங்களைப் பிறகு சாவகாசமாகக் கூறுகிறேன் முதலில் நீங்கள் உணவு அருந்துங்கள்'' என்று பணிவுடன் கூறினான்.

மன்னனும் உணவு உண்டு விட்டு அந்த ஏழை மனிதன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க ஆவலுடன் இருந்தான். ஏழை மனிதனும் மன்னனைச் சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளும்படிக் கூறி மாலையில் வந்து அவனிடம் விவரமாகக் கூறுவதாகச் சொல்லிவிட்டுச் சென்றான்.

மாலையில் ஏழை மனிதன் வந்து மன்னனை அரண்மனைப் பூங்காவில் சந்தித்தான். அவன் மன்னனின் பக்கத்தில் அமர்ந்து தான் ராட்சஸத் தீவை அடைந்ததிலிருந்து அன்று வரை நடந்தவற்றை எல்லாம் விவரமாகக் கூறினான். முடிவில் அவன் ''அரசே! மனிதனிடம் எல்லா சக்தியும் உள்ளது என்றாலும் அந்த மனிதனையும் ஆட்டிப் படைப்பவன் அந்த ஆண்டவன்தான். அவன்தான் படைப்பவன், காப்பவன். அழிப்பவன். அவன் என்ன நினைக்கிறானோ அதன்படித்தான் மனிதன் நடக்கிறான். அவன் விரும்பினால் ஒரு ஏழையைப் பணக்காரனாக்கி சுக வாழ்வு அளிக்கலாம். ஒரு பணக்காரனுக்குத் தொல்லை கொடுத்து அவனது சுக வாழ்வைக் கெடுத்தும் விடலாம். இதற்கு உதாரணங்கள் நாமே'' என்றான்.

மன்னனும் ''நீ சொல்வது சரியே உன்னை அழிக்க ராட்சஸத் தீவிற்கு அனுப்பினேன். நீ இறக்காமல் உயர் நிலையில் திரும்பி வந்திருக்கிறாய். எவ்வளவு பணம் இருந்தும் ராஜபிளவையால் அவஸ்தைப்பட்ட நான் தெய்வீக சக்தி கொண்ட உன்னால் தான் சுகவாழ்வு அடைய முடிந்தது. எனவே நீ கூறும் எல்லாம் அந்த ஆண்டவன் செயல் என்பதை முழு மனதுடன் ஏற்கிறேன். இப்போது தான் உண்மையை உணர்ந்தேன்'' என்றான்.

ஏழை மனிதனும் ''ஆகா! உங்கள் மனம் மாறிவிட்டது. அதுவும் அந்த ஆண்டவன் செயல் தான்'' எனக் கூறி மெய் சிலிர்த்து நின்றான்.

**(நிறைவுற்றது)**



# பொன்மயமான பொழுதுகள் - 15



அம்புலிமாமா

***1. ...பிரம்மாண்டமான திகால் ஆலயங்கள்***

பிரமிட் வடிவான இந்த கற்கட்டடங்கள் வாகனங்களின் உதவியோ மிருகங்களின் உதவியோ இல்லாமல் கட்டடக் கலைக்குப் பெயர் போன மாயாக்களால் கட்டப்பட்டவை




## *உலகில் இவற்றை எங்கு காண்பீர்கள்*

அவர்கள் கணக்கிலும் வான சாஸ்திரத்திலும் சிறந்து விளங்கியவர்கள். அவர்களது நாகரீகம் கி.பி. 250லிருந்து கி.பி. 900 வரை தழைத்திருந்தது



***2. ...செப்டம்பர் அக்டோபரில் இங்கு பறவைகளின் இயல்புகள் விசித்திரமாக இருக்கும்;***

பனி மூட்டமுள்ள சில இரவுகளில் இங்கு பறவைகள் எந்த வெளிச்சத்தைத் தமக்குக் கீழ் கண்டாலும் உடனே பாய்கின்றன. அதனால் தரை மீது மோதி அவை இறந்து போகின்றன. சில தரை மீது விழுந்து தம் நினைவில்லாமல் கிடக்கும். அப்போது அவ்வூரார் அவற்றைப் பிடித்துக் கொள்கிறார்கள். இதற்கான விளக்கங்களை விஞ்ஞானிகள் பல விதமாய்க் கூறினாலும் அவை இறப்பதற்கான காரணத்தை மட்டும் அவர்களால் சரியாகக் கூற முடியவில்லை.

***2. ...இரு கண்டங்களில் பரவியுள்ள ஒரு நகரம்***

பழங்காலத்தில் பைஜான்டியம் என்றும் சிறிது காலத்திற்கு முன் வரை கான்ஸ்டான்டிநோபில் எனப் பெயர் பெற்ற இந்நகரம் ஐரோப்பாவிலும் பரவியுள்ளது. ஐரோப்பிய இஸ்லாமிய நாடு ஒன்றின் தலைநகரமாக இது தற்போது உள்ளது.



## படப் புதிர்

இந்த கடல் வாழ் இனங்கள் யாவை?




## கதைப் புதிர்

### நீங்கள் துப்பறிபவராக ஆகுங்கள்

சேட் கோகுலதாஸின் பங்களாவில் திருடர்கள் நுழைந்து ரூ 1,40,000/- பெறுமான பொருள்களைத் திருடிக் கொண்டு போய் விட்டார்கள். இது அப்பகுதியில் நடந்த ஐந்தாவது திருட்டு. எல்லாத் திருட்டுகளிலும் திருடர்கள் ஜன்னல்களின் கண்ணாடிகளை உடைத்து விட்டுத்தான் உள்ளே புகுந்திருந்தார்கள். இன்ஸ்பெக்டர் தேசாய் சேட் வீட்டு ஜன்னலிலிருந்து உடைந்து கீழே விழுந்திருந்த கண்ணாடித் துண்டுகளைப் பார்த்துக் கொண்டிருந்த போது அவ்வீட்டு வாசற் காப்போன் வந்து அவர் பக்கத்தில் நின்றான்.



அவன் இன்ஸ்பெக்டரிடம் ''நான் எந்த சத்தத்தையும் கேட்கவில்லை. ஏனென்றால் அது நடுராத்திரி. அப்போது ஒரு எக்ஸ்பிரஸ ரயில் ஓடிக் கொண்டிருந்தது. அந்த ரயிலின் சத்தத்தில் எதுவுமே காதில் விழவில்லை. அந்த சமயத்தில் தான் திருடன் எல்லா வீடுகளிலும் நுழைந்திருக்கிறான் என்று நினைக்கிறேன்'' என்றான்.

இன்ஸ்பெக்டர் கடுமையான குரலில் ''திருட வருபவன் வீட்டுக்காரர்கள் கேட்கும் படி சத்தம் போட்டுக் கொண்டு வர மாட்டான். சரி சொல். நீ திருடினதை எல்லாம் எங்கே மறைத்து வைத்திருக்கிறாய்?'' என்று அதட்டிக் கேட்டார்.

வாசற்காப்போன் தான் திருடியதை ஒப்புக் கொண்டான். இன்ஸ்பெக்டர் அவன்தான் திருடனென்று எப்படித் தெரிந்து கொண்டார்?



1. ஆறு சர்க்கரைக் கட்டிகளை ஒவ்வொரு கோப்பையி லும் ஒற்றைப்படை எண் வரும்படி போட வேண்டும். ஆறு கட்டிகளையும் உடைக்காமல் போட வேண்டும். முடியுமா?

## வேடிக்கை வினாக்கள்

2. உங்களது மாமாவின் தங்கை உங்களுக்கு அத்தை முறை உறவு இல்லை என்றால் அவர் உங்களுக்கு என்ன உறவு?

3. பனானா ஆயில் எதிலிருந்து தயாரிக்கப்படுகிறது?

- ❑ வாழை
- ❑ சர்க்கரை
- ❑ நிலக்கரி



4. ஒரு காலிக் கூண்டில் எவ்வளவு குரங்குகளை வைக்கலாம்?

5. பறவைகள் தெற்கு நோக்கியே ஏன் பறக்கின்றன?

6. என்னிடமுள்ள ஒரு கடியாரம் ஒரு நாளில் இருமுறைதான் சரியான நேரத்தைக் காட்டுகிறது. மற்ற சமயங்களில் சரியான மணி காட்டு வதில்லை. அது எப்படிப்பட்ட கடியாரம்?



*செயல்முறை*

# முட்டை ஓட்டில் பேபர் வெய்ட்

ஒரு முட்டையைச் சுத்தப்படுத்தி அதற்குள் பிளாஸ்டர் ஆஃப் பாரிஸை அடைக்கவும். முட்டையைத் திருப்பி பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் உலர்ந்து கெட்டியாகும்படிச் செய்யவும்.

பிறகு முட்டை ஓட்டின் மீது வண்ணம் பூசவும்

இப்போது 'பேபர் வெய்ட்' தயார்!



## நாமும் வரைவோம் — நெருப்புக் கோழி




## பொன்மயமான பொழுதுகள் 14ன் விடைகள்

### உலகில் எங்கு?

1. இங்கிலாந்தில் கெண்டிலுள்ள டோவர்.
2. பீஹாரிலுள்ள பட்னாவில்
3. ஸ்டாலின் கிராடின் மமயேவ் குன்றின் மேல்.
4. கிழக்குத் துருக்கியிலுள்ள கப்படோசியா
5. தென்னாப்பிரிக்காவில் க்ருஜெர் தேசீயப் பூங்கா

### படப் புதிர்

1. மற்றொரு முகம் ஒரு கிழவியினுடையது பெண்ணின் கன்னம் அவளது மூக்கு. பெண்ணின் கழுத்தைச் சுற்றியுள்ள ரிப்பன் கிழவியின் வாய்.
2. சக்கரத்தின் கம்பிகள் நன்கு தெரிகின்றன. வேகமாகப் போகும் சைகிளின் கம்பிகள் தெரியாது.

### கதைப் புதிர்

அசோகர் காலத்தில் இந்தியாவில் கொய்யா மரம் இருக்கவில்லை. ஐரோப்பியர்கள் இதை இந்தியாவிற்குக் கொண்டு வந்தார்கள்

### வேடிக்கை வினாக்கள்

1.



2. இல்லை

3.
1) பாஸிலிஸ்க்
2) ட்ராகன்
3) போனிக்ஸ்
4) யூனிகார்ன்

4. மோகன் சிவப்பு நிறத் தொப்பி அணிந்திருக்க வேண்டும். வினயின் தொப்பியும் சிவப்பாக இருந்திருந்தால் ராமன் தன் தொப்பி கருப்பு என ஊகித்துக் கூறி இருப்பான்.




பாண்டவர்கள் எந்த நாட்டில் போய் அஞ்ஞாதவாசம் புரிந்து ஓராண்டு காலத்தைக் கழிப்பது என்று யோசிக்கலானார்கள். பாஞ்சாலம், சேதி, மத்ஸ்யம், சூரசேனம், படச்சரம், விசார்ணம், நவராஷ்டிரம், மல்லம், சால்வம், யுகந்தரம், குந்தி, சௌராஷ்டிரம், அவந்தி ஆகிய செழிப்பான நாடுகளைப் பற்றி அவர்கள் யோசித்துப் பார்த்தார்கள்.

முடிவில் தருமர் ''நாம் விராட மன்னனின் நாடான மத்ஸ்ய தேசத்திற்குப் போய் அந்த மன்னனிடம் பணி புரியலாம். ஆனால் நாம் எல்லோரும் பெயர்களை மாற்றிக் கொண்டு மாறு வேடங்களில் செல்ல வேண்டும். நான் ஒரு அந்தணனின் வேடத்தில் கங்கபட்டன் என்ற பெயரில் விராட மன்னனின் சபையில் இருப்பேன். வேத சாஸ்திரங்கள், புராணங்கள் ஆகியவற்றை அவனுக்குக் கூறுவேன். அவனுடன் சதுரங்கம் ஆடுவேன். இதற்கு முன் எங்கே இருந்தீர்களென்றால் நான் பாண்டவர்களில் மூத்தவரான தருமரிடம் பணிபுரிந்ததாகக் கூறுவேன். நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் பெயர்களை மாற்றிக் கொண்டும் மாறு வேடங்கள் அணிந்தும் விராடனிடம் ஏதாவது ஒரு வேலையில் அமர வேண்டும்'' என்றார்.

பீமனும் ''நான் வல்லபன் என்ற பெயரில் விராட மன்னனின் சமையல்காரனாகப் பணிபுரிவேன். இதற்கு முன் பாண்டவர்களின் அரண்மனையில் சமையல் வேலை செய்து வந்ததாக அம்மன்னனிடம் கூறுவேன்'' என்றான்.

அப்போது அர்ஜுனன் ''இப்போது எனக்கு ஊர்வசி அளித்த சாபம் கை கொடுக்கிறது. நான் அலியாகி பிரகன்னளை என்ற பெயரில் விராட மன்னனின் மகளுக்கு ஆடல் பாடல்களைக் கற்றுத் தருவேன். நான் ஆணு



மல்லாது பெண்ணுமல்லாது அலியாக இருப்பதால் எனக்கு அந்த வேலை கிடைத்து விடும்'' என்றான்.

நகுலனும் ''நீங்கள் உங்கள் வேலைகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது போல நானும் என் வேலையைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறேன் என் பெயரை தாமக்கிரந்தி என மாற்றிக் கொள்கிறேன். மன்னனின் குதிரை லாயங்களில் குதிரைகளைக் கவனித்துக் கொள்ளும் வேலையைக் கேட்டு வாங்கிக் கொள்கிறேன். நானும் பாண்டவர்களது குதிரைலாயங்களில் பணிபுரிந்து நல்ல அனுபவம் பெற்றவன் எனக் கூறிக் கொள்கிறேன்'' என்றான்.

சகதேவனும் ''நானும் உங்களைப் போல என் பெயரையும் தந்திரிபாலன் என மாற்றிக் கொள்கிறேன். நான் விராட மன்னனின் ஆடு மாடுகளைக் கவனித்துக் கொண்டு பணிபுரிந்து வருகிறேன்'' என்றான்.

தருமரும் ''சரி. நாம் ஐவரும் எப்படி அஞ்ஞாத வாசம் புரிவது என்று தீர்மானித்து விட்டோம். இனி துரௌபதி என்ன செய்யப் போகிறாள்? அவளது எண்ணம் என்ன என்று கூறட்டும்'' என்றார். துரௌபதியும் ''நீங்கள் எல்லோரும் இருக்கும் இடத்தில்தான் நான் இருப்பேன். உங்களைப் போலவே நானும் விராட மன்னனின் ராணியிடம் பணிப் பெண்ணாகப் பணி புரிவேன். என் பெயரை சைரந்திரி என்று வைத்துக் கொள்ளப் போகிறேன்'' என்றாள்.

தருமரும் அது கேட்டு மிகவும் திருப்தி அடைந்தார். இவ்வாறு அவர்கள் தீர்மானித்த பின் தருமர் அதுவரை தம்மோடு இருந்த தௌம்யரையும் மற்ற அந்தணர்களையும் பார்த்து ''பிராம்மண சிரேஷ்டர்களே! இது வரை எங்களோடு இருந்து கஷ்டங்களை அனுபவித்தீர்கள். இனி நாங்கள் அஞ்ஞாத வாசம் ஒரு வருட காலத்திற்குச் செய்தாக வேண்டும். எனவே நீங்கள் பாஞ்சால தேசத்திற்குச் சென்று அங்கு துருபதனை அண்டி இருங்கள். நாங்கள் அஞ்ஞாதவாசத்தை எங்கு எப்படிப் புரிகிறோம் என்பதை நீங்கள் அறிந்திருந்தாலும் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள வேண்டாம். அதை யாரிடமும் கூற வேண்டாமென்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்'' என்றார்.

தௌம்யரும் அப்போது சில அறிவுரைகளைப் பாண்டவர்களுக்குக் கூறினார். அந்தணர்கள் அவர்களை

ஆசீர்வதித்து விட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள். தௌம்யரும் அவர்களை ஆசீர்வதித்து விட்டு விடை பெற்றுக் கொண்டு சென்ற பின் பாண்டவர்கள் தம் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு துவைத வனத்தை விட்டுக் கிளம்பினார்கள்.

அவர்கள் மலைகளையும் காடுகளையும் கடந்து மத்ஸ நாட்டின் எல்லையை அடைந்தார்கள். துரௌபதி அந்த நாட்டின் ஆரம்பப் பகுதியைப் பார்த்து விட்டு "இந்த நாடு மிகச் செழிப்பாக உள்ளதே. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேலென்று வயல்களும் தோப்புகளும் மரம் செடி கொடிகளுமாகக் கண்ணுக்குக் குளிர்ச்சியாக உள்ளன. விராட நகரம் இன்னும் வெகு தூரத்தில் இருப்பது போலத் தோன்றுகிறது. நான் மிகவும் களைத்துப் போய் விட்டேன். இன்றிரவு கழியும் வரை இங்கே தங்கி விட்டுப் போகலாமா?" என்று கேட்டாள்.

தருமரோ அந்தக் காட்டைக் கடந்து செல்ல எண்ணி துரௌபதியைத் தூக்கிக் கொண்டு வருமாறு அர்ஜுனனிடம் கூறினர். அவர்கள் அந்தக் காட்டைக் கடந்து விராட நகரத்தின் எல்லையை அடைந்து விட்டார்கள். அப்போது தருமர் "நம் ஆயுதங்களை எங்காவது பாதுகாப்பான இடத்தில் மறைத்து வைக்க வேண்டும். இவற்றை நம்மோடு எடுத்துக் கொண்டு விராட நகருக்குள் செல்ல முடியாது. அர்ஜுனனின் காண்டீபத்தைப் பரர்த்ததுமே நம்மை இன்னாரென்று யாவரும் தெரிந்து கொண்டு விடுவார்கள். அதனால் எங்கு இவற்றை மறைத்து வைக்கலாம்



என்று பாருங்கள்" என்று கூறினார்.

அர்ஜுனன் நாலா புறத்திலும் சுற்றிப் பார்த்தான். அங்கு ஒரு மயானத்தையும் அங்கு ஓங்கி உயர்ந்து அடர்ந்து வளர்ந்திருந்த மரத்தையும் கண்டான். அங்கு ஜன நட மாட்டம் இராது என எண்ணியும் உயர்ந்த மரத்தின் மேல் கிளைக்கு யாராலும் செல்ல முடியாது என்பதனையும் அவன் கண்டாள். அதனால் அம்மரத்தின் உச்சியில் கிளைகளுக்கிடையே தம் ஆயுதங்களை ஒளித்து வைப்பது என்று அவன் தீர்மானித்தான்.

பாண்டவர்கள் தம் வில் அம்புகளையும் வாட்களையும் ஒன்றாகக் குவித்தார்கள். தருமர் கூறியதன் பேரில் நகுலன் அந்த ஆயுதங்களைக் கட்டி எடுத்துக் கொண்டு மரத்தின் உச்சாணிக் கிளைகளுக்கிடையே



மறைத்து வைத்து அதன் மீது ஒரு பிணத்தையும் போட்டு நன்கு மறைத்தான். ஒருவேளை தப்பித் தவறி யாராவது அந்த மரத்தின் உச்சி வரை போக முயன்றால் அந்தப் பிணத்தைப் பார்த்து பயந்து கீழே இறங்கி ஓடி விடுவான் என்று எண்ணித்தான் அவன் அவ்வாறு செய்தான்.

இவ்வாறு பாண்டவர்கள் பத்திரமாகத் தம் ஆயுதங்களை மறைத்து வைத்த பின் விராட நகரத்திற்குள் சென்றார்கள். போகும் வழியில் தருமர் துர்க்கா தேவியைப் பிரார்த்தனை செய்து ''தேவி! நீதான் எங்களுக்குத் துணையாக இருக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்.

துர்க்கா தேவியும் அவர் முன் தோன்றி ''மகனே. கவலைப்படாதே. விரைவிலேயே பெரும் போர் மூளப் போகிறது. அதில் நீ வெற்றி பெறுவாய்'' எனக் கூறி ஆசிகளை அளித்து விட்டு மறைந்தாள். அடுத்த வினாடியே அவரது கையில் கமண்டலம் இருந்தது. அவர் அணிந்திருந்த ஆடைகள் காவி வஸ்திரங்களாக ஆயின. மற்ற பாண்டவர்களுக்கும் அவர்கள் அணிய இருந்த வேடங்களுக்கேற்ப சாதனங்கள் கிடைத்தன. அவற்றை அவர்கள் வைத்துக் கொண்டு தம் வேடத்திற்கு ஏற்ப தம்மைத் தயார் செய்து கொண்டார்கள்.

தருமர் சதுரங்க ஆட்டக் காய்களைத் தம் கைகளில் உருட்டியவாறே விராட மன்னனின் தர்பாருக்குச் சென்றார். சன்னியாசியின் வேடத்தில் வந்த தருமரின் தேஜஸைக் கண்ட விராட மன்னன் பயபக்தியுடன் அவரை வணங்கினான். தருமரும் ''அரசே! நான் கொஞ்சகாலத்திற்கு உனது சபையில் இருக்க நினைக்கிறேன். என் பெயர் கங்கபட்டன். நான் பாண்டவர்களில் மூத்தவரான தருமரின் உயிருக்கு உயிரானவன். அவருடன் சதுரங்கம் விளையாடி அவரை நான் மகிழ்வித்து வந்தேன். உங்களையும் அவ்வாறே மகிழ்விப்பேன்'' என்றார்.

விராட மன்னனும் ''மகாத்மா! உங்களை மகிழ்ச்சியுடன் என் சபையில் இருக்க வரவேற்கிறேன். உங்களுக்கு உரிய மரியாதை கிடைக்கும். யாராவது உங்களை அவமதித்தால் அவனுக்குக் கடும் தண்டனை கிடைக்கும். எனக்குச் சமமாக உங்களை யாவரும் மதிக்க வேண்டும். இதை இப்போதே இச்சபையினருக்கும் மற்றவர்களுக்கும் அறிவிக்கிறேன்'' எனக்கூறினான்.

சற்று நேரத்திற்குப் பின் அழுக்

காடைகளை அணிந்து ஒரு கையில் கரண்டியும் மற்றொரு கையில் கத்தியும் கொண்டு பீமன் அரண்மனைக்கு வந்து விராட மன்னனைக் கண்டான். அவன் மன்னனை வணங்கி ''அரசே! நான் பாண்டவர்களின் அரண்மனையில் சமையல்காரனாக இருந்தவன் வாய்க்கு ருசியாக யாவருக்கும் சமைத்துப் போடுபவன். என் பெயர் வல்லபன். என்னைத் தங்கள் அரண்மனையில் சமையல்காரனாக வைத்துக் கொள்ளுங்கள்'' என வேண்டினான். விராட மன்னனும் ''நீ சமையல் காரனா? உன்னைப் பார்த்தால் மற்போர் புரியும் வீரன் போல இருக்கிறதே'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

பீமனும் பணிவுடன் ''அரசே! நான் சமையல்காரன்தான். ஆனால் பீமரிடம் மற்போரில் பயிற்சி பெற்றவன். ஒழிந்த வேளைகளில் நான் அவருடன் மல்யுத்தம் புரிந்தது உண்டு. இவ்வாறு கூறுவதற்காக மன்னிக்க வேண்டும். சமையல்காரன் என்றால் மற்போரில் பயிற்சி பெறக் கூடாது என்று விதி எதுவும் இல்லையே'' என்றான்.

விராட மன்னனும் அது கேட்டு பலமாகச் சிரித்து ''பேஷ்! பேஷ்! நீ நன்றாகவும் பேசுகிறாய். உனக்கு சமையல் வேலையைக் கொடுக்கிறேன்'' என்று கூறி வேலையை அவனுக்கு அளித்தான்.

இதே சமயம் எளிய கசங்கிய ஆடைகளில் தலையை சரியாக வாரிக் கொள்ளாமல் துரௌபதி நகரத்து வீதிகளில் சென்று கொண்டிருக்கவே அவளைப் பார்த்தவர்களெல்லாம் ''யாரம்மா நீ? எங்கிருந்து வந்தாய்? இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்கலானார்கள்.

அவளும் அவர்களிடம் ''என் பெயர் சைரந்திரி. எனக்கு யாராவது வேலை கொடுத்தால் அவர்கள் திருப்திப்படும் விதத்தில் எல்லா வேலைகளையும் செய்வேன்'' என்றாள். அப்





போது அரண்மனை மேல் மாடியில் நின்று கொண்டிருந்த மகாராணி சைரந்திரியைப் பார்த்தாள். அவளை அழைத்து வரும்படி மகாராணி ஒரு பணிப் பெண்ணை அனுப்பினாள்.

சைரந்திரி வந்ததும் ராணி சுதேஷ்ணா அவளிடம் ''நீ யாரம்மா? எங்கே வேலை செய்கிறாய்?'' என்று கேட்டாள். அவளும் ''என் பெயர் சைரந்திரி. இதற்கு முன் பாண்டவர்களின் மனைவியான துரௌபதியிடம் பணிபுரிந்து வந்தேன். பூ கட்டுதல், தலைவாரி விட்டு சிங்காரித்தல் போன்ற பணிகளை துரௌபதிக்குச் செய்து வந்தேன். உங்களிடமும் அதே வேலையைச் செய்ய அனுமதிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டாள்.

சுதேஷ்ணா தேவியும் ''நீ மிகவும் அழகாகப் பேசுகிறாய். அதை விட நீ பார்ப்பதற்கு அழகாக இருக்கிறாய். எந்த ஆடவனும் உன்னைப் பார்த்தாலே ஆசைப்பட்டு உன்னை அடைய விரும்புவான். அதனால் உன்னை என்னிடம் பணிக்கு வைத்துக் கொண்டால் என்னவெல்லாம் ஆபத்து வருமோ என்று பயப்படுகிறேன்'' என்றாள்.

சைரந்திரியும் ''எனக்கு இந்த அழகை கொடுத்தவர்கள் ஐந்து கந்தர்வர்கள். அவர்கள் என்னைப் பாதுகாக்க எப்போதும் தயாராக இருக்கிறார்கள். யாராவது என்னிடம் தகாத முறையில் நடந்தால் அவர்கள் அவனைதக்கபடி தண்டித்து விடுவார்கள். அதனால் எனக்கு ஆபத்து நேருமோ என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம். என் வேலையில் பிறரது கால்களைக் கழுவ மாட்டேன். பிறர் சாப்பிட்டு மீதமான எச்சல் உணவை சாப்பிட மாட்டேன். இவை தவிர வேறு எதைச் சொன்னாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றாள். சுதேஷ்ணாவும் அவள் இஷ்டப்படியே இருக்கலாமென்று கூறி சைரந்திரியை வேலைக்கு வைத்துக் கொண்டாள்.

அதன்பின் அலியாக மாறிய அர்ஜுனன் பிரகன்னளை என்ற பெயரில் தர்பாருக்குச் சென்றான். அங்கு மன்னனைக் கண்டு ''அரசே! என் பெயர் பிரகன்னளை. ஆடல் பாடல்களைக் கற்பிப்பதிலும் ஆடிப் பாடுவதிலும் என்னை மிஞ்சி யாரும் இல்லை. எனக்குப் பெண்களுக்கு அலங்காரம் செய்து விடவும் தெரியும். எனவே எனக்கு அரண்மனை அந்தப்

புரத்தில் பணிபுரிய வாய்ப்பு கொடுங்கள்'' என்று அவன் வேண்டியதை மன்னனும் ''உன் நீண்ட கைவிரல்களைப் பார்த்ததுமே நீ சிறந்த கலைஞனாகத்தான் இருக்க வேண்டுமென நினைத்தேன். அது சரியாகி விட்டது'' என்று கூறி தன் மகள் உத்தரைக்கு ஆடல் பாடல்களை கற்பிக்கும்படி அவளை அந்தப்புரத்திற்கு அனுப்பினான்.

அதற்குப் பின் மன்னன் தன் குதிரைகளைப் பார்க்கச் சென்ற போது அங்கு நகுலன் குதிரைகளையே பார்த்துக் கொண்டு நிற்பதைக் கண்டான். மன்னன் அவனைத் தன்னருகே அழைத்து ''யாரப்பா நீ? ஏன் குதிரைகளையே பார்த்து நின்று கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான். நகுலனும் ''என் பெயர் தாமகிரந்தி. என்னால் குதிரைகளை கவனித்து அவற்றில் எவை முரடானவை எனக் கண்டு அவற்றை அடக்க முடியும். குதிரைகளுக்கு வரும் நோய்களைக் கண்டறிந்து அவற்றிற்கு மருந்து கொடுக்கவும் தெரியும். நான் தருமரின் குதிரை லாயங்களில் பணிபுரிந்தவன். இந்நாட்டில் எனக்கு வேலை கிடைக்குமென நம்பி வந்திருக்கிறேன்'' என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டு விராட மன்னன் திருப்தி அடைந்து அவனைத் தன் குதிரைகளைப் பார்த்துக் கொள்ள நியமித்தான்.

இதற்கு ஓரிரு நாட்களுக்குப் பிறகு சகதேவன் மன்னனைக் கண்டு ''அரசே! நான் மாடுகளையும் பசுக்களையும் நன்கு பார்த்துக் கொள்பவன். என் பெயர் தந்திரிபாலன் என்பது. நான் மாடுகளுக்கு வேளா வேளைக்குத் தீவனம் வைத்து நிறைய நல்ல பாலை அவை கொடுக்கும்படிச் செய்வேன். பாண்டவர்களிடம் இதே வேலையிலிருந்து நல்ல அனுபவம் பெற்றவன். எனவே தாங்கள் என்னை வேலையில் அமர்த்திக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினான்.

விராட மன்னனும் அவன் கூறியதைக் கேட்டுத் திருப்தி அடைந்து அவனை தன் பசு மாடுகளைப் பார்த்துக் கொள்ள நியமித்தான். இவ்விதமாக பாண்டவர்களும் துரௌபதியும் விராட மன்னனிடம் வேலைக்கு அமர்ந்து தம் அஞ்ஞாத வாச காலத்தைக் கழிக்கலானார்கள்.



# அம்புலிமாமா செய்திகள்

### இந்தியச் சிறார்களுக்காக...!

ஜெர்மனியில் இரக்க மனம் கொண்ட சிலர் சேர்ந்து 'ஐக்ஸ்' என்றொரு அமைப்பை நிறுவியுள்ளனர். இந்தியச் சிறார்களின் எதிர்காலத்திற்காக என்பது இதன் பொருள். கெர்ஹார்ட் என ஒரு வங்கியாளர் இந்த அமைப்பின் தலைவர். தொழிலமைச்சர் டாக்டர் நார்பர்ட் ப்ளூம் இதன் போஷகர். இந்த அமைப்பில் ஜெர்மனியில் நீண்ட காலம் வசித்து வரும் இந்தியர்கள் உட்பட 160 பேர்கள் உறுப்பினர்களாக உள்ளனர். பிறந்த நாள், திருமண நாள் ஆகியவற்றைக் கொண்டாடும் போது அவர்கள் இதற்கு நன் கொடை வழிக்கிறார்கள். இவ்வாறு சேகரித்த நிதியிலிருந்து நம் நாட்டுச் சிறுவர், சிறுமியரின் கல்விக்கும், உடல் ஊனமுற்ற சிறார்களுக்கு செயற்கை உறுப்புகளும், சக்கர வண்டிகள் வாங்கிக் கொள்ளவும், பள்ளிகள், மருத்துவமனைகள், நூல் நிலயங்கள் கட்டுவதற்கும் பண உதவி அளிக்கப்படுகிறது. தாம் அனுப்பும் பணம் சரியான முறையில் பயன்படுத்தப்படுகிறதா எனக்காண ஐக்ஸ் உறுப்பினர்கள் அவ்வப்போது நம் நாட்டிற்கு வந்து கண்காணிக்கிறார்கள்.

### இந்திய ஓவியங்களுக்கு கிராக்கி

லண்டனின் ஒரு பிரபல ஏலக் கம்பெனி ஏற்பாடு செய்த ஏல விற்பனையிலிருந்து இந்திய ஓவியங்களுக்கு மேலை நாடுகளில் நல்ல கிராக்கி உள்ளது என்று மீண்டும் தெரிய வந்துள்ளது. ராஜா ரவிவர்மா தீட்டிய புடவை கட்டிய பெண்ணின் ஓவியம் 20,30,000 ரூபாய்களுக்கு விலை போயிற்று. எஸ்.எஸ். பிந்த்ரே தீட்டிய ஓவியம் 11,60,000 ரூபாய்களுக்கு விற்பனையாகியது. மற்றும் ஹப்பார் கணேஷ் பேய்ஸ்,



அஞ்சலி இலா மேனன் ஆகியோரின் ஓவியங்களுக்கும் நல்ல கிராக்கி உள்ளது. சென்ற ஒரு ஆண்டில் 600 ஓவியங்கள் ஏலமிடப் பட்டனவாம்.

### வடதுருவம் சென்றடைந்த முதலாவது பெண்மணி

பிரான்ஸைச் சேர்ந்த டாக்டர் கிரிஸ்டின் ஜூனியன் என்ற நாற்பது வயதுப் பெண்மணி செர்கி ஓகோரோட்னிகோவ் என்ற ரஷ்ய வழி காட்டியின் உதவியோடு ரஷ்யாவின் வட முனையிலிருந்து வட துருவத்திற்குப் போய்ச் சேர்ந்தார். இவர்கள் இருவரும் நடந்தே மார்ச் 3ந் தேதி அதை அடையக் கிளம்பிச் சென்றார்கள். இவர்கள் அங்கு போய்ச் சேர 60 நாட்கள் பிடித்தன. டாக்டர் கிரிஸ்டின் நடந்தே சென்றது மட்டுமல்லாமல் வழியில் கண்ட குழந்தைகளுக்கு வைத்தியமும் செய்து கொண்டே போனாராம்.

# அம்புலிமாமா அனுபந்தம் 105



நம் நாட்டுக் கண்கவர் காட்சிகள்

## பாகவத மேளா




தமிழ்நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்குச் சில கி.மீ. தொலைவிலுள்ள மெலட்டூர் என்ற கிராமத்தில் ஆண்டு தோறும் நரசிம்ம ஜெயந்தியை ஒட்டி 'பாகவத மேளா' என்ற பெயரில் நாட்டிய நாடகங்கள் நடைபெறுகின்றன. இவற்றைப் பார்ப்போருக்கு மனநிறைவு ஏற்படுகிறது. தெருக்கூத்து பாணியில் நாட்டிய நாடகங்கள் இந்த மேளாவில் நடிக்கப்பட்டு மக்களைக் கவர்ந்து இழுக்கின்றன.

பாகவத மேளாவைப் பற்றி அறிய வேண்டுமானால் இன்றைக்கு முன் ஐநூறு வருடங்களுக்கான வரலாற்று ஏடுகளைப் புரட்டிப் பார்க்க வேண்டும். தென்னிந்தியாவில் ஆட்சி புரிந்த நாயக்க மன்னர்கள் கலைகளைப் பெரிதும் ஆதரித்து ஊக்கமளித்து வந்தார்கள். இந்த நாட்டிய நாடகக் கலையை வளர்க்க நாயக்க மன்னர்கள் மெலட்டூரை ஐநூறு தெலுங்கு பிராம்மணக் குடும்பங்களுக்கு மானியமாக அளித்தார்கள்.

மெலட்டூர் வரத ராஜசுவாமி ஆலயத்திற்கு எதிராக தெருவில் நாடக மேடை அமைக்கப்படுகிறது. ஆலயத்தின் உற்சவ விக்கிரகங்கள் அலங்கரிக்கப்பட்டு ஆலயத் தலைவாசலில் வைக்கப்படுகின்றன. இதனால் நாடகங்கள் கடவுளுக்கு எதிரில் நடத்தப்பட்டு அவரது அருளையும் ஆசிகளையும் பெறுகின்றன என்று அந்நாடக நடிகர்கள் கருதுகிறார்கள். நாடக மேடைக்கு பின் பின்னணி வாத்தியக்காரர்கள் அமர்கிறார்கள்.

நாடகங்கள் புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டவை. நீண்ட காலமாக இந்நாடகங்களில் நடிப்பவர்களெல்லாம் மெலட்டூரைச் சேர்ந்த ஆண்களே. பாகவத மேளா நாடகக் கலையின் அற்புதமான அழகிய அங்கமாகும்.

*புராணகால மன்னர்கள் :*

# பிரம்மதத்தர்

பாஞ்சால மன்னர் பிரம்மதத்தர் மிகுந்த கருணை உள்ளம் படைத்தவர். நீதி தவறாமல் ஆட்சி புரிபவர். அவருக்கு எல்லா ஜீவராசிகளும் பேசும் மொழிகளைப் புரிந்து கொள்ளும் சக்தி இருந்தது.

ஒருநாள் மாலைப் பொழுதில் அவர் தம் மனைவியோடு அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தார். அப்போது அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு செடியருகே நின்று விட்டு அவர் பலமாகச் சிரித்தார். அப்போது அவரது மனைவி சுற்றிலும் பார்த்து விட்டு "இங்கே சிரிப்பதற்கான விஷயம் எதுவும் இல்லையே. நீங்கள் எதற்காகச் சிரித்தீர்கள்?" என்று கேட்டாள். அவரும் "அது ஒன்றும் குறிப்பிடத்தக்க விஷயம் அல்ல" என்றார்.

அந்த பதில் அவரது மனைவிக்குத் திருப்தி அளிக்கவில்லை. அவள் மீண்டும் வற்புறுத்திக் கேட்கவே அவரும் "இந்தச் செடியின் கீழே இரண்டு எறும்புகள் பேசிக் கொள்வதைக் கேட்டு சிரித்தேன். என்னால் எல்லாப் பிராணிகளும் பேசும் மொழிகளைப் புரிந்து கொள்ள முடியும்" என்றார். ஆனால் அவரது மனைவி அதை நம்பவில்லை. தன்னை அவர் கேலி செய்கிறார் என எண்ணி "நீங்கள் சொல்வது நம்பத்தக்கதாக இல்லை. இதை நான் நம்ப மாட்டேன்" என்றாள். அவரோ தனக்கு அவ்வித சக்தி இருப்பதாகக் கூறவே அவளும் "உங்களுக்கு அந்த சக்தி எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள்.

அதற்கான பதில் பிரம்மதத்தருக்குத் தெரியவில்லை. அந்த அற்புத சக்தி தனக்கு எப்படி வந்தது என்று ஆழ்ந்து யோசிக்கலானார். தனிமையில் முழுமனதுடன் கடவுளை தியானித்தார். மறுநாள் அரண்மனைக்குப் பக்கத்தில் அவர் நடந்து கொண்டிருக்கையில் ஒரு கிழப் பிராம்மணர் அவரைப் பார்த்து ஒரு சுலோகத்தைக் கூறினார். அந்த சுலோகத்தில் பிரம்மதத்தரின் முன்பிறப்பு பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன.

பிரம்மதத்தர் ஒரு காலத்தில் ஒரு முனிவரின் புதல்வர். அப்பகுதியில் கடும் பஞ்சம் ஏற்பட்டு உணவு கிடைக்காததால். அவர் தம் குரு வளர்த்து வந்த பிராணியைக் கொன்று அதன் மாமிசத்தைத் தின்றார். அந்தப் பாவத்தின் பயனாக எவ்வளவோ பிறப்புகள் எடுத்து பல கஷ்டங்களை அனுபவித்த பிறகு மீண்டும் ஒரு முனிவரின் புதல்வராகப் பிறந்தார். அப்போது ஒரு மன்னரின் வைபவத்தைப் பார்த்து அவர் தானும் ஒரு மன்னனாக இருக்க வேண்டுமென விரும்பியதால் அடுத்த பிறவியில் அவர் அரசரானார். இதற்கு முந்தைய பிறப்பில் அவர் எல்லாப் பிராணிகளுடன் அன்புடன் பழகியதால் அவரது தவ சக்தி அடுத்த பிறப்பில் மன்னராகப் பிறந்த போது எல்லாப் பிராணிகளும் பேசுவதைப் புரிந்து கொள்ளும் சக்தியைப் அளித்தது.

முன் பிறப்புகள் பற்றி பிரம்மதத்தர் அறிந்ததும் தன் நினைவை இழந்து விழுந்து விட்டார். சற்று நேரத்திற்குப் பின் அவர் சுய நினைவு பெற்றார். அது முதல் அவர் பக்தி மார்க்கத்தில் செல்லலானார்.

முன் பிறப்பில் செய்த நற்செயல்களின் பயன்கள் அடுத்த பிறப்பில் கிடைத்து அதே இயல்புகளையும் சக்தி சாமர்த்தியங்களையும் கொண்டு ஒருவர் செயல்படுகிறார் என்பதற்கு பிரம்மதத்தரின் வரலாறே எடுத்துக் காட்டாகும்.



## பனிக்கட்டி மலை

சமுத்திரத்தில் மிதக்கும் பெரிய பனிக் கட்டிகளைப் பனிக்கட்டி மலை என்று கூறுகிறார்கள். பெரிய பனிக்கட்டிகள் பனிமலைகளிலிருந்து உடைந்து பிரிந்து வருகின்றன. மிகப் பெரிய பனிக்கட்டிகள் உலகின் தென் துருவக் கடலில் தென்படு கின்றன. சுமார் 60 மைல் நீளமும், 20 மைல் அகலமும், 350 அடி உயரமுமுள்ள பனிக்கட்டிகள் அண்டார்டிகா பனிமலை யிலிருந்து பிரிந்து வருகின்றன. இந்தப் பனிக்கட்டி மலைகள் மீது தாற்காலிக ஆராய்ச்சிக் கூடாரங்களை விஞ்ஞானி கள் அமைக்கிறார்கள். விமானங்களை இவற்றின் மீது இறக்குகிறார்கள். வட துரு வத்தில் பனிக்கட்டி மலைகள் உயரமாக இருப்பதில்லை. அவை பெரும்பாலும் கிரீன்லாண்டியிலிருந்து வடக்கு ஆர்க்டிக் கடலை நோக்கி மிதந்து செல்கின்றன.




## வானவில்




### உதவும் மொழி

லூயிப்ரெயில் என்ற பதினேழு வயது மாணவர் கண் பார்வை இழந்தவர்களின் வாழ்க்கையையே மாற்றி விட்டார். அவர் 'ப்ரெயில்' என்ற மொழியைக் கண்டு பிடித்தார். இம்மொழியில் படிக்க வும் எழுதவும் பார்வை இழந்தவர்கள் கற்க முடியும். மேடு பள்ளங்களாய் புள்ளிகள் கொண்ட கோடுகளைக் கொண்டு இது இருப்பதால் இதன் எழுத் துக்களைக் கை விரல்களால் தடவி இவர்களால் படிக்க முடியும். டைப் ரைட்டர் போலுள்ள ப்ரெயில் ரைட்டர் கொண்டு ப்ரெயில் எழுத்துக்களை உருவாக்க முடியும்.



# யார் கொடையாளி?

தனகுப்தன் என்ற பணக்காரனுக்கு குருநாதன், ரகுநாதன் என்ற இரு புதல்வர்கள் இருந்தார்கள். தந்தை இறந்ததும் அவனது திரண்ட செல்வத்தை இரு புதல்வர்களும் சமமாகப் பிரித்துக் கொண்டார்கள். இருவருக்கும் ஏழு தலைமுறைக்குப் போதுமான சொத்து கிடைத்தது.

குருநாதன் ஆடம்பரமாக வாழலானான். பட்டாடைகளை உடுத்திப் பகட்டாகத் திரிந்தான். தன்னிடம் யார் வந்து எதைக் கேட்டாலும் அதைக் கொடுத்து அவன் மாபெரும் கொடையாளி எனப் பெயர் பெற்று விட்டான்.

ரகுநாதனோ எளிய வாழ்க்கை நடத்தி வந்தான். அவனிடம் யார் வந்து உதவி கேட்டாலும் முதலில் அந்த மனிதனிடம் பல கேள்விகள் கேட்டு அவனுக்கு உதவி செய்வது சரிதானா என்று யோசித்து விட்டே அவன் உதவி செய்வதாகத் தீர்மானித்தால்தான் உதவி புரிவான். எனவே எல்லோரும் குருநாதனையும் ரகுநாதனையும் ஒப்பிட்டு குருநாதனை கொடையாளி என்றும் ரகுநாதனைக் கஞ்சன் என்றும் கூறி வந்தார்கள்.

அந்த ஊருக்குச் பக்கத்து ஊரில் பசுபதி என்பவன் இருந்தான். அவன் நடுத்தர குடும்பத்தினன். அவனுக்கு மணி என்ற மகனும் மாலா என்ற மகளும் இருந்தனர். பசுபதி தன் மகளின் திருமணத்திற்காக மிகவும் சிரமப்படடுக் கொண்டிருந்தான்.

அப்போது அவனது அடுத்த வீட்டுக்காரன் அனந்தன் அவனிடம் ''பசுபதி! நான் புனிதத் தலங்களுக்குச் சென்று வரப் போகிறேன். அதற்கு முன் இந்த மோதிரத்தைப் பத்திரமாக வைத்திருக்கும்படி உன்னிடம் வேண்டுகிறேன். இது என் வம்சபரம்பரையாக வந்தது. எனவே இதை வேறு எங்காவது வைத்து இழந்து விட விரும்பவில்லை. எனவே தான் இதை உன்னிடம் கொடுக்கிறேன்''

—சங்கர சுவாமிநாதன்—

என்றான். பசுபதியும் அதை பத்திர மாகவைத்திருந்து திருப்பிக்கொடுப்ப தாகக் கூறி வாங்கிக் கொண்டான்.

பசுபதி அந்த மோதிரத்தை நகைப் பெட்டிக்குள் மற்ற நகைகளோடு சேர்த்து வைத்தான். ஆனால் அது பற்றித் தன் மனைவியிடம் சொல்ல மறந்து விட்டான். இதற்கு அடுத்த நாள் மாலாவைப் பெண் பார்க்க ஒரு குடும்பத்தவர் வெளியூரிலிருந்து வந்தனர். அவர்களுக்குப் பெண்ணும் பிடித்து விட்டது. மணமகனின் தாய் பெண்ணுக்குப் போடப்படும் நகைகளைப் பார்க்க விரும்புவதாகக் கூறவே மாலாவின் தாயும் அவளை ஒரு அறைக்குள் அழைத்துப் போய் நகைப் பெட்டியை எடுத்து வந்து அதைத் திறந்து காட்டினாள்.



மணமகனின் தாயார் அதிலிருந்த அனந்தனின் மோதிரத்தைப் பார்த்து அதை எடுத்துக் கொண்டு ''இது மிக அழகாக இருக்கிறது. இதை இப்போதே எடுத்துக்கொள்கிறேன். நாம் இப்போதே திருமணத்தை நிச்சயம் செய்து கொள்ளலாம்'' என்றாள்.

மாலாவின்தாயார்அந்த மோதிரத்தைக் கண்டு திகைத்தாள். அதுவரை அவள் அதைப் பார்த்ததில்லை. அதனால் அவள் ''என் கணவரிடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டு வருகிறேன்'' எனவே மணமகளின் தாயார் ''இந்த சிறு விஷயத்தையெல்லாம் இப்போது அவரிடம் சொல்ல வேண்டாமே. இதையும் உங்கள் பெண்ணுக்கு மணத்திற்குப் பின் கொடுக்கத் தானே போகிறீர்கள். அதை இப்போதே எடுத்துக்கொள்கிறேன். அவ்வளவுதான். வாருங்கள். போய் திருமணத்தை நிச்சயம் செய்து விடுவோம்'' என்று கூறி மாலாவின் தாயாரை அழைத்துக் கொண்டு எல்லோரும் இருக்கும் இடத்திற்கு வந்தாள். திருமணம் நிச்சயிக்கப்பட்டது. மணமகனின் தாயார் அனந்தனின் மோதிரத்தோடு தன் ஊருக்குக் கிளம்பிச் சென்றாள்.

சில நாட்களுக்குப் பின் அனந்தன் தீர்த்த யாத்திரையிலிருந்து திரும்பி வந்தான். அவன் பசுபதியிடம் தான் கொடுத்த மோதிரத்தைக் கொடுக்கும்படிக் கேட்கவே பசுபதியும் உள்ளே போய் நகைப் பெட்டியை திறந்து பார்த்தான். அதில் அனந்தனின் மோதிரம் இல்லாதது கண்டு தன் மனைவியை அழைத்து ''இதில் நான் வைத்திருந்த மோதிரத்தைப் பார்த்தாயா?'' என்று கேட்டான். அவளும்



கொடு. அது போல ஒரு மோதிரத்தை நகைக் கடையில் செய்யச் சொல்லி அதை எடுத்துப் போய் என் சம்மந்தி அம்மாளிடம் கொடுத்துவிட்டு உன் மோதிரத்தை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்து தருகிறேன்'' என்றான்.

அனந்தன் சிரித்தவாறே ''அந்த மோதிரத்தின் மதிப்பு இரண்டாயிரம் ரூபாய். உன்னால் அதைச் செய்ய முடியாது'' என்றான். பசுபதியோ ''நான் என் மகளின் திருமணத்திற்காக ஐயாயிரம் ரூபாய் வைத்திருக்கிறேன். அதிலிருந்து இரண்டாயிரத்தை எடுத்து மோதிரம் செய்யலாம். உன் மோதிரத்தைத் திருப்பிக் கொடுப்பதுதான் என் முதல் வேலை. அது போன்ற மோதிரம் இருந்தால் அதை எடுத்துக் கொண்டு போய்க் கடையில் காட்டி அது போல ஒன்றைச் செய்து கொண்டு வந்து விடலாம். பிறகு உன் மோதிரத்தைச் சம்மந்தி அம்மாளிடமிருந்து வாங்கி வருவது எளிதாகி விடும்'' என்றான்.

''ஆமாம். அதில் ஒரு புது மோதிரம் இருக்கவே நான் திகைத்துப் போனேன். அந்த அம்மாள் அந்த மோதிரத்தின் மேல் ஆசைப்பட்டு அதை எடுத்துக் கொண்டு போய் விட்டாள்'' என்று கூறி தற்போது அந்த மோதிரம் சம்மந்தி அம்மாளிடம் இருப்பதாகத் தெரிவித்தாள்.

பசுபதி முகத்தைத் தொங்கப் போட்டவாறே வந்து அனந்தனிடம் நடந்ததைக் கூறினான். அனந்தனும் ''நீ நேர்மையானவன் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அந்த மோதிரம் வம்ச பரம்பரையாக வருவது. நீ இரண்டு வாரங்களுக்குள் அந்த மோதிரத்தைக் கொண்டு வந்து கொடுத்து விடு'' என்றான்.

பசுபதியும் ''சரி அதே மாதிரி மோதிரம் உன்னிடம் இருந்தால்

பசுபதியும் ''அந்த மோதிரம் போல இன்னொன்று என்னிடம் இல்லை. ஆனால் பனையூரிலுள்ள என் ஒன்று விட்ட சகோதரர்களான குருநாதனிடமும் ரகுநாதனிடமும் அது போன்ற மோதிரங்கள் உள்ளன. அவர்களில் குருநாதன் கொடையாளி எனப் பெயர் பெற்றவன். யார் அவனிடம் போய் உதவி கேட்டாலும் உடனே உதவுவான் ஆனால் ரகுநாதன் அப்படிப்பட்டவன் அல்ல, கஞ்சன் என்று கூடப் பெயர் பெற்றவன். யாராவது அவனிடம் உதவி கேட்டால் பல கேள்விகளைக் கேட்டு விட்டே பிறகு

உதவி செய்வதானால் செய்வானாம். எனவே முதலில் குருநாதனிடம் போனால் உனக்கு அந்த மோதிரம் கிடைக்கலாம்'' என்றான்.

பசுபதி தன் மகன் மணியை அழைத்து ''நீ பனையூருக்குப் போய் எப்படியாவது அந்த மோதிரத்தை யாவது அல்லது அதன் படத்தையா வது வரைந்து கொண்டு வா. அங்கு முதலில் குருநாதனின் வீட்டிற்குப் போ. அங்கு உனக்கு மோதிரமோ அல்லது அதன் உருவப் படமோ கிடைக்கா விட்டால் ரகுநாதனை அணுகிப்பார்'' என்று கூறி அவனைப் பனையூருக்கு அனுப்பினான்.

மணியும் பனையூரில் குருநாத னின் வீட்டிற்குச் சென்றான். அப் போது அந்த வீட்டில் விசேஷ பூஜை ஒன்றிற்கு தடபுடலான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. குருநாதன் அவற்றை கவனிப்பதில் மூழ்கி இருந் தான். மணி அவனை அணுகி ''உங்களி டம் ஒரு விஷயத்தை விவரமாய்க் கூறி உதவி பெற வந்திருக்கிறேன்'' என்று ஆரம்பித்தான். குருநாதனோ ''இப் போது நீ சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்க நேரமில்லை. நான் ஒரு முக்கியமான பூஜைக்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். உனக் குப் பணம்தானே வேண்டும்? இந்தா உன் செலவுக்குப் பத்து ரூபாய் வைத் துக்கொள்'' என்று கூறி பத்து ரூபாயை மணியின் கையில் திணித்து விட்டுத் தன் வேலையை கவனிக்கப் போய் விட்டான்.

மணி திகைத்துப் போனான். தன்னிடம் எதுவும் கேட்காமல் பத்து ரூபாயைக் கொடுத்ததை ஏற்க அவன் மனம் மறுத்தாலும் வேறு வழியின்றி அதைத் தன் பையில் போட்டுக் கொண்டு வேண்டா வெறுப்பாக ரகுநாதனின் வீட்டிற்குச் சென்றான். அவன்தான் கஞ்சனாயிற்றே என்ன உதவி செய்து விடப் போகிறான்





என்றுதான் மணி எண்ணினான்.

தன் வீடு தேடி வந்த மணியை ரகுநாதன் அன்புடன் வரவேற்றான். குடிக்க குளிர்ந்த நீர் மோர் கொடுத்து உபசரித்தான். பிறகு மணி கூறியதை எல்லாம் நிதானமாகக் கேட்டுக் கொண்டான். பின்னர் பல கேள்விகளை மணியிடம் கேட்டு விஷயம் முழுவதையும் நன்கு தெரிந்து கொண்டான்.

பிறகு அவன் மணியிடம் ''உன் வேலை சற்று சிக்கலானது. மிக எச்சரிக்கையுடன் நீ இதில் செயல் புரிய வேண்டும். நீ கூறியது போன்ற மோதிரம் எங்கள் குடும்பத்தில் வம்ச பரம்பரையாக இருந்து வருகிறது. இதோ என் விரலில் உள்ளதுதான் அது. இது விலை மதிக்க முடியாத ஒரு பொருளென நான் நினைக்கிறேன் அதனால் இதை உன்னிடம் கொடுக்க மாட்டேன். மேலும் இந்த மோதிரத்தை செய்யக் கூடியவன் ரத்தினம் என்பவன்தான். அவன் புதுக்குடியில் இருக்கிறான். அவன் இப்போதெல்லாம் இந்த மாதிரி சிறு வேலைகளைச் செய்வதில்லை. ஆனால் அவன் இது போன்ற மோதிரத்தைச் செய்ய வைக்க நான் உன்னுடன் புதுக்குடிக்கு வருகிறேன். வா, நாம் போய் மோதிரத்தைச் செய்து கொண்டு வரலாம்'' என்றான்.

மணியோ திகைத்துப் போய் ''நான் இதற்காகும் பணத்தைக் கொண்டு வரவில்லையே. இப்போதே என் ஊருக்குப் போய் எடுத்து வருகிறேன்'' என்றான். ரகுநாதன் சற்று யோசித்து ''உன் தங்கையின் திருமணத்திற்காக வைத்திருக்கும் பணத்திலிருந்து தானே இதற்காகப் பணம் கொண்டு வரப் போகிறாய்? இந்த மோதிரத்திற்காகச் செலவு செய்த பின் உன் தந்தையால் மீதப் பணத்தைக் கொண்டு உன் தங்கையின் திருமணத்தைச் செய்து முடிக்க இயலாதே. அதற்காக உன் தந்தை யாரிடமாவது கடன் வாங்கத் தானே வேண்டும்? நானே அவருக்கு அந்தப் பணத்தைக் கடனாகக் கொடுக்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்ட மணி ரகுநாதன் இவ்வளவு நல்லவனா என்று ஆச்சரியப் பட்டான். அதன்பின் இருவரும் புதுக் குடிக்குச் சென்றார்கள். பயணச் செலவு, உணவுக்கான செலவு எல்லாமே ரகுநாதனே ஏற்றான். ரகுநாதன் ரத்தினத்திடம் விஷயத்தை விளக்கி தன் மோதிரம் போல ஒரு மோதிரத்தைச் செய்து கொடுக்கும்படிக் கூற,

ரத்தினமும் இரண்டே நாட்களில் அதைச்செய்து கொடுத்தான். அதுவும் ரகுநாதனுக்காக ஆயிரத்து எண்ணூறு ரூபாய்க்கே செய்து கொடுத்தான்.

ரகுநாதன் அந்த மோதிரத்தை எடுத்துக் கொண்டு மணியை அழைத்துக் கொண்டு பசுபதியின் சம்மந்தி இருந்த ஊருக்குச் சென்றான். அவன் அத்தம்பதிகளைச் சந்தித்து ''நீங்கள் எடுத்து வந்த மோதிரம் பசுபதியினுடையதல்ல. அவரது அண்டை வீட்டுக்காரரான அனந்தனுடையது. அது அவர் வீட்டில் வம்சபரம்பரையாக இருந்து வருவது. அதனால் அது போன்ற ஒரு மோதிரத்தை உங்களுக்குக் கொடுத்து விட்டு அந்த பழைய மோதிரத்தை வாங்கிச் செல்ல வந்திருக்கிறோம். இத்தவறுதல் நடந்ததற்காக பசுபதி மிகவும் வருத்தப்படுவதாகத் தங்களிடம் தெரிவிக்கவும் சொன்னார்'' என்றான்.

அவர்களும் பசுபதியின் நேர்மையைப் பாராட்டி அந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டு தாம் எடுத்து வந்த பழைய மோதிரத்தை ரகுநாதனிடம் கொடுத்தார்கள். ரகுநாதனும் அதை எடுத்துக் கொண்டு மணியுடன் அவனது ஊருக்கு வந்தான். மணியும் தன் தந்தையிடம் நடந்ததை எல்லாம் கூறினான். ரகுநாதனும் பசுபதியிடம் அனந்தனின் மோதிரத்தைக் கொடுத்தான்.

பசுபதி ரகுநாதனின் இருகைகளையும் பற்றிக் கொண்டு ''பிறர் மனம் நோகாமலும் எங்கள் மானம் போகாமலும் நீங்கள் செயல்பட்டிருக்கிறீர்கள். எங்கள் தேவையை உணர்ந்து பணத்தையும் கொடுத்த உதவி இருக்



கிறீர்கள். உங்களுக்கு மிகவும் கடன் பட்டிருக்கிறேன். உங்களுக்கு எப்படி நன்றி கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை'' என்றான்.

ரகுநாதன் தன் கைகளைப் பசுபதியிடமிருந்து விடுவித்துக் கொண்டு ''ஐயா, பிறருக்கு நம்மாலான உதவியைச் செய்ய வேண்டும். கடவுள் கிருபையால் எனக்கு சாப்பாட்டிற்குக் குறையே இல்லை. ஏதோ என்னாலான உதவியை மற்றவர்களுக்குச் செய்யும் சக்தியையும் அவர் எனக்குக் கொடுத்திருக்கிறார். நான் உங்களுக்குக் கொடுத்தக் கடனை நீங்கள் மெதுவாக உங்கள் சௌகரியப்படி திருப்பிக் கொடுக்கலாம். அவசரம் ஒன்றும் இல்லை. உங்களால் கொடுக்க இயலாது போனாலும் நான் கவலைப்பட மாட்டேன். என்னால்

உங்களுக்கு உதவ முடிந்ததே என்று நான் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றான்.

அப்போது மணி ஆச்சரியப்பட்டு ''இப்படிப்பட்ட உயர்ந்தவரையா எல்லோரும் கஞ்சன் என்கிறார்கள்? உங்களுக்கும் உங்கள் தமையனாருக்கும் சமமான சொத்து உள்ளது. அவர் பகட்டாயும் படாடோபமாயும் வாழ்ந்து வருகிறார். நீங்களோ எளிய வாழ்க்கை நடத்துகிறீர்கள். தேவையை அறிந்து உதவுகிறீர்கள். அதுவும் தாராளமாக. ஆனாலும் உங்களது ஈகையை யாரும் புகழ்ந்து பேசுவதில்லை. இதற்கு என்ன காரணமென்று எனக்குப் புரியவில்லையே'' என்று கேட்டான்.

ரகுநாதனும் சிரித்தவாறே ''உதவி கோரி வருவோரிடம் எந்தக் கேள்வியையும் கேளாமல் அவர் கேட்பதைக் கொடுத்து விட்டால் அப்படிக் கொடுப்பவரைக் கொடையாளி என்று எல்லோரும் புகழ்கிறார்கள். இப்படிச் செய்வதால் பிச்சைக்காரர்கள்தான் அதிகரிப்பார்கள். பிறரது தேவையை அறிந்து அதற்குத் தக்க விதமாய் உதவுவதில் ஒரு திருப்தி ஏற்படுகிறது. அந்தத் திருப்தி புகழை அடைய விரும்பாது. எனக்குக் கிடைத்த சொத்து என் தந்தையால் என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அதை நான் என் புதல்வர்களிடம் அப்படியே ஒப்படைக்க வேண்டும். எனவே நான் என் உழைப்பால் பணம் சம்பாதித்து அதற்குத் தக்கபடி வாழ்ந்து மிகவும் உதவி தேவைப்படுபவர்களுக்கே உதவுகிறேன். அதனால் எளிய வாழ்வு வாழ்கிறேன்'' என்றான்.

பசுபதியும் அவனை வணங்கி, ''நீங்கள் மகான். உங்கள் தமையனார் உங்கள் கால் தூசிக்குக் கூட சமமாக மாட்டார். நீங்கள் உங்கள் ஊருக்குச் செல்ல வண்டி கொண்டு வரச் சொல்கிறேன்'' என்றான். ரகுநாதனோ ''வேண்டாம். எனக்கு இதெல்லாம் பிடிக்காது. நான் நடந்தே என் ஊருக்குச் செல்கிறேன்'' எனக் கூறி பசுபதியிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

பசுபதியின் குடும்பத்தவர் அவன் செல்வதைப் பார்த்தவாறே ''இப்படியும் ஒரு மனிதரா?'' என்று ஆச்சரியப்பட்டு நின்றார்கள்!





# பணம் பிடுங்கிச் சத்திரம்

புலியூர் பிரமுகர்கள் ஒன்று கூடி தம் ஊரில் ஒரு சத்திரத்தை வெளியூரிலிருந்து வரும் பயணிகளுக்காகக் கட்டினார்கள். அதை கவனிக்க கணக்கன் கணபதியையும், வருபவர்களுக்கு உணவு சமைத்துப் போட அன்னம்மாளையும், எடுபிடி வேலைகளைச் செய்ய ஏகாம்பரத்தையும் நியமித்தார்கள். அங்கு வந்து சாப்பிட்டுத் தங்கிப் போகிறவர்களிடம் எவ்விதப் பணமும் பெறக் கூடாது என ஊரார் அம்மூவரிடமும் சொல்லி எச்சரித்தும் இருந்தார்கள்.

முதல் சில மாதங்களுக்கு சத்திர நிர்வாகம் நன்றாக இருந்தது. அதனால் ஊரார் அதைப் பற்றிக் கவலைப் படாமல் இருந்து விட்டார்கள். சத்திரம் தான் ஒழுங்காய் நடக்க மூன்று பேர்களை நியமித்து விட்டோமே, அவர்கள் நேர்மையாக இருந்து அதை நடத்தி வருவார்களென அவர்கள் இருந்து விட்டார்கள். தம்மைத்தட்டிக் கேட்க யாருமில்லை என்று கணபதியும், அன்னம்மாளும், ஏகாம்பரமும் தம் கைவரிசைகளைக் காட்ட ஆரம்பித்து விட்டார்கள். சில்லரை வாங்காமல் ஏகாம்பரம் எந்தப் பயணியையும் சத்திரத்துள் நுழைய அனுமதிக்கவில்லை. சாப்பாடு போட ஒரு ரூபாய் கொடுத்தாலே அன்னம்மாள் இலை போட்டுப் பரிமாறலானாள். கணபதியோ இரவில் தங்கும் பயணிகளிடம் இரண்டு ரூபாய் வசூலித்துத் கொண்டே அவர்களுக்குப் படுக்க இடம் அளிக்கலானான். ஆக பயணிகளிடம் பணம் பிடுங்கும் சத்திரமாக அது ஆகிவிட்டது.

ஒருமுறை முத்து என்பவன் அச்சத்திரத்தில் தங்க வந்தான். அவனிடம் பைசாக் கூட இல்லை. ஏகாம்பரமோ ''இங்கே நுழைய எனக்கு அரை ரூபாய் கொடுக்க வேண்டும். சாப்பிடுவதற்கு அன்னம்மாளுக்கு ஒரு ரூபாய் கொடுக்க வேண்டும். தங்குவதற்கு

—எஸ். சங்கரராம்—

கணபதிக்கு இரண்டு ரூபாய் கொடுக்க வேண்டும். இவ்வளவுக்கும் பணம் இருந்தால் உள்ளே நுழை. பணம் இல்லாவிட்டால் அதோ எதிரில் தெரியும் மரத்தடியே போய் படுத்து விட்டுப் போ'' என்று இரக்கமில்லா மல் கூறி விட்டான். முத்துவிடம் பணம் இல்லை. ''இதை தரும சத்திரம் என்றார்களே. ஆனால் இங்கே உள்ளவர்கள் பணமல்லவா பிடுங்குகிறார்கள். என்ன அநியாயம் இது'' என்று மனம் புழுங்கியவாறே இரவு எதுவும் சாப்பிடாமல் மரத்தடியே படுத்து விட்டு மறுநாள் காலை தன் ஊருக்குப் போய் சேர்ந்தான்.

மறுநாள் முத்து தன் ஊராரிடம் புலியூரில் சத்திர வாசலில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறினான். அப்போது சவடால் சாமா என்பவன் ''அப்படியா அந்தச் சத்திரத்தில் வேலை செய்பவர்கள் பணம் கறக்கிறார்கள்? இது அந்த ஊராருக்கு தெரியாது போலிருக்கிறது. இதற்கு நான் ஒரு வழி செய்கிறேன்'' என்று கூறி மணி என்பவனை அழைத்துக் கொண்டு இருட்டும் வேளைக்குப் புலியூரின் எல்லையை அடைந்தான்.

அவன் மணியிடம் ''நீ ஊருக்குள் போய் ஜமீன்தாரரின் மாப்பிள்ளை சத்திரத்திற்கு வந்திருப்பதாயும் அவர்களை அவர் பார்க்க விரும்புவதாகவும் சொல். நான் நேரே சத்திரத்திற்குப் போகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான். சத்திர வாசலில் நின்ற ஏகாம்பரம் அவனைத் தடுத்து ''எடு சில்லரையை'' எனவே சாமா காது கேளாதவன் போல ''அப்புறமா வாங்கி கொள்கிறாய்? சரி அப்படியே செய்'' எனவே பிறகு அரை ரூபாய் வாங்கிக் கொள்ளலாமென எண்ணி அவன் சாமாவை உள்ளே போக விட்டான்.

அங்கே பணம் கொடுத்த பயணிகளுக்காக இலைகளை அன்னம்மாள்



போட்டிருந்தாள். அவற்றில் ஒன்றில் மட்டும்பணம்கொடுத்த ஒருவர்வந்து உட்காரவில்லை. சாமா அந்த இலைக்கு முன்போய் உட்கார்ந்தான். அப்போது அன்னம்மாள் ''ஏய் யாரது? நீ பணம் கொடுக்கவில்லை. இலையை விட்டு எழுந்திரு'' என்று கத்தினாள். சாமாவோ காது கேளாதவன் போல ''பத்தியம் எதுவும் இல்லை. எல்லாம்சாப்பிடுவேன். அதனால் எதை வேண்டுமானாலும் மாறலாம்'' என்றான்.

அன்னம்மாளோ ''முதலில் இடத்தை விட்டு எழுந்திரு. பணம் கொடுத்தால் வேறு இலை போடுகிறேன்'' என்றாள். அது கண்டு சாப்பிட உட்கார்ந்திருந்தவர்கள்'' அவருக்கு காது கேட்காது போலிருக்கிறது. இலையில் உட்கார்ந்தவரை எழுந்திருக்கச் சொல்லாதே. அது மகாப் பாவம். அவர்சாப்பிட்டு எழுந்த பிறகு பணம் வாங்கிக் கொள்'' எனவே அன்னம்மாளும் சாமாவுக்கு உணவு பரிமாறினாள். அவனும் நாக்கைச்சப்பை கொட்டிக் கொண்டு மூக்குப் பிடிக்க சாப்பிட்டு எழுந்தான்.

கை அலம்பிக் கொண்டு வந்த அவனிடம் கணக்கன் கணபதி ''இங்கு தங்க எனக்கு இரண்டு ரூபாய் கொடுக்க வேண்டும்'' எனவே சாமாவும் காது கேளாதவன் போல ''பஞ்சு மெத்தை வேண்டாம். பாய் போதும்'' என்று கூறிக் கொண்டிருந்தான். அப்போது ஊர்க்காரர்கள் ''எங்கே ஜமீன் தாரரின் மாப்பிள்ளை?'' என்று கேட்டுக் கொண்டே வந்தார்கள்.

அப்போது சவடால் சாமா ''அவரைப் பிறகு பார்க்கலாம். முதலில் இந்த அநியாயத்தைக் கேளுங்கள். இங்கே நுழையவே இந்த ஏகாம்பரம் பணம் கேட்கிறான், சாப்பாடு போட அன்னம்மாள் பணம் வசூலிக்கிறாள். இங்கே தங்க கணபதி பணம் கொடு என்கிறான். இது தர்ம சத்திரம் தானே. நீங்களே விசாரியுங்கள்'' என்றான்.

ஊரார் விசாரித்ததில் அங்கிருந்த பயணிகள் எல்லாம் தாம் மூவருக்கும் பணம் கொடுத்ததாகக் கூறினார்கள். ஊர் பிரமுகர்கள் அம்மூவருக்கும் அபராதம் விதித்ததோடு அவர்களை வேலையிலிருந்து நீக்கி விட்டு வேறு மூவரை நியமித்து சத்திரத்தையும் அவ்வப்போது மேற்பார்வை செய்தும் வரலானார்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்.



S. G. SESHAGIRI



S. G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஆகஸ்டு 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## ஜுன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **நாவில் பட்டு உடலைக் குளிர வைப்பது.**

இரண்டாவது போட்டோ : **கண்ணில் பட்டு மனதைக் குளிர வைப்பது.**

பரிசு பெற்றவர் : **திரு. டி. கண்ணன், சிங்கநல்லூர், கோவை-5.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., Chandamama Buildings, Chennai - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 (India) Editor : NAGI REDDI.